

**வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால்**
**வேங்கடமே மெய்வினைநோய் தீர்ப்பதுவும் வேங்கடமே**
**தானவரை வீழத் தன்னாழி ப்படைதொட்டு**
**வானவரைக் காப்பான் மலை.**

—நான்முகன் திருவந்தாதி - 48

*நித்ய ஸூரிகளால் உண்மையான பக்தியுடனே ஆச்ரயிக்கப்படுவதும் திருமலையே; பாவங்களையும் உடம்பைப் பற்றின நோய்களையும் போக்கடிக்க வல்லதும் திருமலையே; அசுரர்கள் மாளும்படி தனது சக்ரா யுதத்தைப் பிடித்து தேவர்களைக் காத்தருளுமெம்பெருமானுடைய திரு மலை திருவேங்கடமேயாம்!*

# ஸப்தகிரி


செப்டம்பர் - 1990

தனிபபிரதி ரு. 1 — மலா 21

வருடச் சந்தா ரூ. 12 — இதழ 4


## உள்ளுறை

பககம



### அட்டைப்பட விளக்கம்

திருமலை பிரமமோத்ஸவம்

முன்னட்டை : பல்வேறு வாகனங்களில ஸ்ரீ தேவி பூதேவி சமேத உதஸவர்

முதல் உள்அட்டை : சிறிய சேஷவாகனத்தில் உத்ஸவர்

2-வது உள்அட்டை : திருத்தேர்

பின்னட்டை : வஸநதோத்ஸவ அலஙகாரம


சிறபபாசிரியர் :
திரு. எம். வி. எஸ். பிரஸாத், I.A.S.,
செயலாட்சித் தலைவா,
தி.தி.தேவஸதானம், திருபபதி.

அச்சிடுபவர்
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸதான அசசகம,
திருபபதி.

ஆசிரியர் :
திரு. கே. சுபபாராவ், எம்.ஏ.

துணையாசிரியர் :
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு :
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI

# உங்களுடன் . . . .

உலகத்திலுள்ள ஒரு சில சமயங்கள் சகுண வழிப்பாட்டைப் பின்பற்ற, வேறு சில சமயங்கள் நிர்க்குண வழி பாட்டினை மேற்கொள்ள, இந்து சமயம் அருவம், உருவம் அருவுருவம் ஆகிய மூவகை வழிபாடுகளையும் தன்னகத்தே கொண்டு சமய உலகில் தனக்கென ஓர் இடம் பெற்றுப் பெருமையுடன் திகழ்கின்றது. இவ்வகையில் கல்லிலே கலை வண்ணம் கண்டு விக்ரக ஆராதனை மேற்கொண்டனர். இயற்கையின் இன்றியமையாததை மனதிற் கொண்டு செடி களுக்கும், மரங்களுக்கும் தெய்வத் தன்மை ஏற்றி அவ்இயற்கையின் பின்னணியில் புனிதத்தைக் கண்டு தன்னுடைய உள்ள வளர்ச்சியினை இயற்கையுடன் இணைத்து தனைச் சுற்றி ஓர் ஆன்மீகச் சூழ்நிலையை வளர்த்துக் கொண்டான். கண்ணுக்குத் தெரிந்தும், கைகளுக்குப் பிடிபடாத அவ்இயற்கை தந்திட்ட சக்திகளான நெருப்பினையும், ஒளியினையும், (ஒலியினையும்), இந்து மதத்தினர் வழிபடத் தவறவில்லை பின்னர் தான் படைத்திட்ட மொழியினையும் வணங்கும் முகத்தான் சமய இலக்கியங்களைப் படைத்திட்டான். ஆகவே அசையும், அசையா, தெரியும் தெரியா எப்பொருளா யினும், எவ்வுயிராயினும் அவைகளுக்குத் தெய்வத் தன்மை தந்து, தன்னைப் பாதுகாத்துக் கொள்ளவும், தன்னைத் திருத்திக் கொள்ளவும் இறுதியில் தன் பிறவிக்கு ஒரு பொருள் இருக்குமாறும் இம்மண்ணின் மைந்தன் தன்னை அமைத்துக் கொண்டான்.

இவ்வகையில் சிந்தித்துச் சீரிய வாழ்க்கையினைத் தனக்கென வகுத்துக் கொள்ள வழிசெய்த ஆன்றோர் நாம் உண்ணும் உணவினைப் பற்றியும் மிக நன்றே அறிந்து வைத்திருந்தனர். உயிர் வாழ்வதற்கு ஆதாரமான அவ் வுணவான அன்னத்தினை பரம்பொருளாகவே வைத்துப் போற்றினர்; வழிபடவும் செய்தனர். மண்ணில் விழும்போதே ஒவ்வொரு உயிரும் பசிக்குரல் தந்து கொண்டேதான் விழுகின்றன. ஒரு நாள் உணவு தவறினாலும், உயிரும் உடலும் தள்ளாடுகின்றன. ''பசி வந்திடப் பத்தும் பறந்து போம்'' எனும்படி பசியின்முன் கருணை தியாகம், நேர்மை, உறவு, அறிவு போன்றனவற்றிற்குப் பொருள் இருப்பதில்லை. எனவேதான் உயிருடன் இரண்டறக் கலந்துவிடும் அவ் அன்னத் தினை வேதம் புகழ்கின்றது; உபநிஷத்துக்கள் போற்றுகின்றன; புராணங்கள் பெருமை பேசுகின்றன. அன்னத்தால் உயிர்கள் உண்டாகின்றன; வளர்கின்றன; அழிகின்றன அழிந்த இவ்வுடல் அன்னமாக மாறுகின்றது. ஆகவே உயிர் களின் பெருமை அன்னத்தைச் சுற்றியே திகழ்கின்றன. ''வயிற்றில் விழும் உணவினை செரித்திடும் ஜடராக்னியாக நான் ஒவ்வொரு உயிரின் உடம்பினுள்ளும் இருக்கின்றேன்'' என்று கண்ணன் கீதையில் கூறுகிறான். ஆகையினால்தான் அவ்அன்னத்தை அக்னிக்கு ஹோமம் செய்தற் பொருட்டே வைதிகன் உணவு உட்கொள்கிறானாம். அதனால்தான் அன்னத்திற்கு 'அநுயாகம்' என்று பெயர். ''அன்னம் பரப்பிரும்ம சொரூபம்'' என்று கூறப்படும் அவ்அன்னத்தைத் தானம் செய்வது என்பது ஒரு யாகத்திற்கு நிகராக ஒப்பிடப்படுகிறது.

''அன்னம் பிரஜாபதி: ஸாக்ஷாத் விஷ்ணு: சிவ: ஸ்வயம்; தஸ்மாத் அன்னம் ஸமம் தானம் நபூதம் ந பவிஷ யதி'' எனும் வேத வாக்கிற்கொப்ப மும்மூர்த்திகளின் மொத்த உருவமாகக் கருதப்படும் அன்னத்தைத் தானம் செய்வ தான செயல் எதற்கும், எக்காலத்திற்கும் ஒப்பிடப்பட முடியாத சிறந்த செயலாகும் என்று கருதப்படுகிறது. அன்னத்தை அளிப்பவன் 'சிரேஷ்டன்' என்றும், அன்னதானம் செய்பவன் எக்குணத்தவனாயினும் அவன் பரமனையே சேருகின்றான் என்றும், அதிதி எனப்படும் விருந்தாளிக்கு அன்னமளிக்காது தான் மட்டும் உண்பவன் நரகத்திற்குப் போகின்றான் என்றும் பலவாறு அன்னதானத்தின் பெருமையை அன்ன தேவதை கூறுகின்றாள் ''அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன், பெற்றான் பொருள் வைப்புழி'' என்றவாறு பசி தீர்த்தவனின் செல்வம் பன்மடங்கு பெருகும் என்று வள்ளுவரும், ''உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே'' என்று மணிமேகலையும், ''ஆர்க்கும் இடுமின் அவரிவர் எண்ணன்மின்'' என்று திருமூலரும் கூறியன யாவும் அன்னதானத்தின் சிறப்பினை விளக்கிடும் சாசனங்களாம் உடல் மற்றும் உள்ள வளர்ச்சியினை உண்டாக்கிடும் அன்னத்தை இக்கலியுகத்தில் தானமாக வழங்கிடல் என்பது, கிருதயுகத் தில் செய்திட்ட தவத்திற்கும், திரேதாயுகத்தில் ஞானம் கைவரப் பெற்றவர்க்கும், துவாபரயுகத்தில் செய்திட்ட யக்ஞத்திற் கும் சமமாகும் என்று அன்றே பராசரர் எனும் மாமுனி கூறிட்ட சத்திய வார்த்தைகளாகும். மற்றைய தானங்களைப் பெறுதற்குச் சில பல தகுதிகள் வரையறுக்கப்பட, அன்னதானத்திற்கு 'பசி' என்ற ஒன்றே தகுதியாக விளங்கிட, அவ் அன்னதானம் புனிதமாகவும், எளியதாகவும் கருதப்படுகிறது. பசித்தவனை எதிர்பார்த்து அவன் பசி தீர்த்துப் பின் தான் உண்ணும் வழக்கத்தை தன் அன்றாட வாழ்க்கையில் ஓர் அங்கமாக ஆன்றோர் மேற்கொண்டனர்.

ஆனால் மக்கள் நெருக்கமும், உணவுப் பற்றாக்குறையும் தனிமனிதனின் 'அன்னதான' ஆசைக்குத் தடை விதித்திட, அன்றைய மன்னர்கள் ஊர்தோறும் 'அன்னசாலைகள்' பல கட்டி, மனிதனின் அடிப்படைத் தேவையினைத் தீர்க்க முயற்சித்தனர். பின் அன்னத்திற்கும், ஆண்டவனுக்கும் உள்ள நெருக்கத்தினைப் பலரும் உணரும் வகையில் மனிதனின் ஆன்மீக உறவு அவனுடைய சமூக அமைதியின்மீதுதான் ஆதாரப்பட்டுள்ளது என்றுணர்ந்து யாத்திரைத் தலங்களிலும், புண்ணியத் தலங்களிலும் 'அன்னதானம்' எனும் அமைப்புக்கு ஓர் முக்கியத்துவம் தரப்பட்டது இதற்கு ஆதரவாக மன்னர்களும், செல்வந்தர்களும் விளைச்சல் நிலங்கள் கொண்ட கிராமங்களை அவ்வவ்வூர் கோயில்களுக்கு மான்யமாகத் தந்தனர். ஆனால் பெருகிவரும் ஜனத்தொகையாலும், பருவநிலை தவறிய மாறுபாடுகளினாலும், அரசியல் மாற்றங்களினாலும் பல கோயில்களில் கடவுளர்களுக்கே தினசரி திருவமுது படைத்திட முடியாத ஓர் அவலம் இம்மண்ணில் தோன்றிட்ட இந்நிலையில் மக்களின் பங்கு இவ்அன்னதானம் எனும் இப்புனித செயலில் ஒரு முக்கியத்துவம் பெற்று விட்டது. இவ்வகையில் நாட்டில் பல புண்ணியத் தலங்களில் அன்னதான இயக்கங்கள் நடைபெற்று வர, வேதம் புகழ்ந்

(48-ம் பக்கம் பார்க்க)

# செய்திச் சுருக்கம்

திருமலைக் கோயிலில் நாளும் உத்ஸவருக்கு நடைபெறும் ஆர்ஜித திருக்கல்யாணோத்ஸவம் நிகழ்ச்சியில் ரூ 2000 கட்டணம் செலுத்தியும் மற்றும் ரூ. 500 கட்டணம் செலுத்தியும் கிருஹஸ்தர்கள் நாளும் பங்கேற்கின்றனர். ரூ. 2000/-க்கான கல்யாணோத்ஸவத்திற்கு 25 குடும்பங்கள் மட்டுமே நாள் ஒன்றிற்கு பங்கேற்க முடியும். ரூ.500/- கட்டணம் செலுத்தி பங்கேற்படும் இக்கல்யாணோத்ஸவத்திற்கு இதுவரை 150 தம்பதியிரை மட்டுமே அனுமதிக்கப் பட்டு வந்தனர். இனிமேற் கொண்டு இப்பிரத்யேக கல்யாணோத்ஸவத்தில் பலரும் பங்கேற்கும் வகையில் விற்கப்படும் டிக்கெட்டுகளின் எண்ணிக்கையின வரைமுறை முழுவதுமாக நீக்கப்பட்டு விட்டது.

ஃ ஃ ஃ ஃ

திருமலைக் கோயில் சேவையில் பக்தர்கள் பலரும் பங்கேற்கும் வகையில், தி. தி. தேவஸ்தானம் 'பாலாஜி சரண ஸேவா சமஸ்தா' எனும் இயக்கத்தினை ஆரம்பித்துள்ளது. தி. தி. தேவஸ்தான பாதுகாப்பு அலுவலர் திரு. வை. எஸ. என. சர்மா அவர்களின் தலைமையின் கீழ் செயற்படும் இவ்இயக்கத்தின் மூலம், திருமலையில் தரிசனவரிசைகளை ஒழுங்குப்படுத்துதல் மற்றும் கோயிலில் நடைபெறும் பொதுக் காரியங்களில் வயது, இன பாகுபாடின்றி பங்கேறகலாம். இச் சேவைக்காக அவர்களுக்கு இட வசதியோ, உணவு வசதியோ செய்து தரப்பட மாட்டாது.

ஃ ஃ ஃ ஃ

திருமலையில் 'ஆம்னிடெல்' எனும் நிறுவனத்தார் 'பேஃபோன' எனும் முறையில் திருமலையிலிருந்து எஸ். டி. டி. முறையில நாட்டின் பல்வேறு பகுதிகளுடன் நேரடியாகத் தொலைபேசி மூலம் தொடர்பு கொள்ளும் வகையில் நவீன வசதிகளுடன் கூடிய 'தொலை பேசி' கருவிகளை தி. தி. தேவஸ்தானத்திற்கு நன்கொடையாக கொடுத்துள்ளனர். இந்தியத் தொலை பேசித்துறை உறுப்பினரான திரு. பி. வி. எஸ். மூர்த்தி அவர்கள் இக்கருவிகளை 8-7-90 அன்று திருமலையில் இயக்கி வைத்தார். இவ் வசதியினைப் பயன்படுத்துவதால் பெறப்படும் கட்டணத் தொகை யாவும் தி தி. தேவஸ்தானத்திற்கு சேரும் என்று கூறப்படுகிறது.

ஃ ஃ ஃ ஃ

8-7-90 அன்று திருமலையில் ரூ. 45 இலட்சம் செலவில் புதிய நவீன வசதிகளுடன் கூடிய தொலை பேசி இணைப்பகம் ஒன்று நிறுவப்பட்டுள்ளது. இது சம்பந்தமாக ஏற்பாடு செய்யப்பட்ட விழாவில் தி. தி. தே. செயலாட்சித் தலைவர். திரு. எம். வி. எஸ். பிரஸாத், இணை செயலாட்சித் தலைவர். திரு. டி. ஜனார்தனம் நாயுடு, பாதுகாப்பு அலுவலர் திரு. வை. எல். என். சர்மா மற்றும் இந்தியத் தொலை பேசி துறையைச் சார்ந்த திரு. பி. வி. எஸ். மூர்த்தி, திரு. எம். ஆர். சுப்ரமண்யன், திரு. டி. கோபால கிருஷ்ணன் ஆகியோர் பங்கேற்றனர்.

ஃ ஃ ஃ

வருடத்திற்கு நான்கு முறை நடைபெறும்கோயிலாழ்வார் திருமஞ்சனம் எனப்படும் இவ்வைதீக கோயில் நிகழ்ச்சி 10-7-90 அன்று திருமலைக் கோயிலில் நடைபெற்றது. காலை 6 மணியிலிருந்து 11 மணி வரை நடைபெற்ற இந்நிகழ்ச்சியின்போது மூலவர் எழுந்தருளியிருக்கும் கோயிலின் உட்பகுதிச் சுவர்கள் மஞ்சள், சந்தனம், பச்சைக் கற்பூரம் போன் வாசனைப் பொருட்கள் அடங்கிய பரிமள குழம்பினால் பூசப்பெற்று, கோவில் சுத்தமாக்கப்பட்டது.

ஃ ஃ

திருமலைக் கோயிலினுள் 'பங்காரு வாகிலி' எனும் இடத்தில் ஆனிவார ஆஸ்தானம் எனும் கோயில் நிகழ்ச்சி 16-7-90 அன்று வெகு விமர்சையாகக்கொண்டாடப்பட்டது.பூதேவி, பூதேவி சமேத கோயில் உத்ஸவர் கண்களைக் கவரும் தங்க ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு, அன்று மாலை திருமலை மாட விதிகளில் அவர்களின் திருவீதி திருவுலாவும் எழுந்தருளச் செய்யப்பட்டது.

சுமார் 30 ஆண்டுகளாக திருமலைக் கோயிலின் பட்டத்து யானையாக சேவை செய்து தனது 57 ஆவது வயதில் விஜயலட்சுமி எனும் யானை 4-7-90 அன்று திருமலையில் மரித்தது. இறந்த அன்றும் காலையில் நடைபெற்ற கோயில் நிகழ்ச்சியிலும் அவ்யானை பங்கேற்றது என்பது குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும். முப்பதாண்டுகளுக்கு முன்பு கர்னாடக அரசினால் இவ்யானை திருமலைக் கோயிலுக்கு பரிசாக வழங்கப் பட்டது. இறந்த இவ்யானையின் நெருங்கிய தோழியாகக் கருதப்படும் கோயிலின் மற்றொரு யானையான ஜானகி தன் தோழி இறந்த நாளிலிருந்து 5 நாட்கள் வரை உணவு ஒன்றும் உட்கொள்ளாமல், அழுத வண்ணம் இருந்த காட்சி பல்லோர் கண்களைப் பனித்தது.

ஃ ஃ ஃ

(46-ம் பக்கம் பார்க்க)

சில தவிர்க்க முடியா காரணங்கள் முன்னிட்டு இம்மாத இதழில் வெளிவரவேண்டிய "லிங்க பூஜை" எனும் கட்டுரையின் இறுதிப்பகுதி அடுத்த இதழில் இடம் பெறும.

— ஆர்.

# வாமனன் - திருவிக்கிரமன்



திருமாலின் அவதாரங்களில் மிகப் பெருமை வாய்ந்தவைகளுள் வாமனன் அவதாரமும் ஒன்றாகும். இவ்வவதாரத்தில் பற்பல விசேஷங்கள் உண்டு. அவற்றில் ஒன்று இது இரட்டை அவதாரமாக இருந்த லாகும். வராகம், நரசிம்மம் இவைகள் எல்லாம் ஒரு கொடிய அரக்கனை அழிப்பதற்கே என்றே எடுக்கப் வை என்றும், இதுதான், முதலாவதாக மக்களினத்தாரின் நல்வாழ்வுக்காகவே எடுக்கப்பட்டதென்றும் கூறுவது மற்றொரு சிறப்பு வாமனன் உருவத்தில் மிகச் சிறியவன் (வயதிலும்தான்), ஆனால் திருவிக்கிரமனோ வானும் மண்ணும் ஒன்றாகிவிட்டனவோ என்று ஐயுறுமாறு வளர்ந்த நெடியோன்! எனவே வேதத்தில் கூறப்பட்டுள்ள-"அணோரணியான் மஹதோ மஹியான்" (சிறியதான அணுவிற்கும் சிறியவன், பெரிதில் மிகப் பெரியவன்) என்ற வாக்கிற்கு இலக்கணமாக அமைந்தாற் போலுள்ளது மற்றுமொரு சிறப்பாகும்.

மஹாபலி என்ற அரசன் மிக நன்றாக அரசு புரிந்து வந்தான். அவன் ஆட்சியில் கொடுங்கோல் இல்லை; செங்கோலே செலுத்தப் பெற்று வந்தது. மக்கள் நலவாழ்வு வாழ்ந்து வந்தனர்; அரசனும் மககளிடத்தில் அன்பாகவே ஆட்சி செலுத்தினான். ஆனால் இந்த பரந்த பூவுலகம் தன் சொந்தமென்றும், தானே அரசுரிமை செலுத்த வேண்டுமென்றும் இறுமாந்தான். உலகமே தனதாகையினால், வந்து, "தா" என்று கேட்போருக்கு "இல்லை" என்னாது வாரி வழங்கி வந்தான்.

திரு. க. சுகுமாரன், எம். ஏ.
திருவாரூர்.

எனினும் அவன் ஈகையில் கனிவு இல்லை. அகம்பாவமும் அகந்தையுமே இடம் பெற்றிருந்தன. 'தானல்லவோ கொடுக்க வல்லவன்; மற்றெவரும் பெற்றுப் போகவல்லவோ வாழ்கின்றனர்' என்ற வீம்பிலேயே கர்வமுறறிருந்தான். இவன் அகந்தையை ஒழிக்கவும், உலகமனைத்தும் கடவுளின் சொத்துதான்-அதை தனதென்று கூறிக் கொள்வதோ அதை மற்றவர்க்குத் தானமாக அளித்துக் கர்வம் கொள்வதோ தகாத செயல் என்று நிரூபிக்கவும், பெருமாள் இந்த

அவதாரத்தை மேற்கொண்டார் என்று கூறுவர்.

வாமனின் ஜயந்தியானது புரட்டாசி மாதம் சுக்கில பட்சம் திருவோண நட்சத்திரன்று ஆகும். திருவோண நட்சத்திரம் இதனால் பெருமை அடைந்திருக்கிறது என்றே சொல்ல வேண்டும். கலிகாலக் கடவுளான வேங்கடமுடையானின் திருநட்சத்திரமும் திருவோணமேதான். அவர் பெயரையே தாங்கி, சமஸ்கிருதம், தமிழ் இரு மொழிகளிலும் தேர்ச்சிபெற்று அவைகளின் மூலமாக வைணவ சமுதாயத்திற்குப் பல தொண்டுகள் ஆற்றியுள்ள வேதாந்த தேசிகரின் திருநட்சத்திரமும் திருவோணமே. கேரள நாட்டினர் இன்றும் சிறப்பாகக் கொண்டாடும் 'ஓணம்' பண்டிகையும் இந்த புரட்டாசித் திருவோணத்தில்தான் என்பதைக் குறிப்பிடலாம்.



திரிவிக்ரமன் கோயில் - திருக்கோவிலூர்

வாமனன் கதை யாவரும அறிந்ததே. அரக்கச் சக்கரவர்த்தியான பலி என்பவன் பிரகலாதனின் பேரன். தன் தோள் வலிமையால் நாட்டை விஸ்தரித்து, அன்போடும் நெறியோடும் அரசாண்டு வந்தான். ஆனால் அகந்தையினால் தனக்குச் சமமானவர்கள் எங்கும் கிடையாது என்ற இறுமாப்புடன் இருந்தான். எனவே,. திருமால் இவன் அகந்தையை அடக்க, சிறு பிரம்மச்சாரியின் வேடம் தாங்கி-குறள் வடிவாகி-பலியின் யாக சாலைக்கு வந்து நின்றார். அவரைக்கண்ட பலி, 'உமக்கு என்னவேண்டும்' என்று வினவ, 'மூன்றடி மண் தா' என்று இரந்தாராம, மூவுலகத்திற்கும் முதல்வனான விஷ்ணு! 'பக்தர்களுக்கு வேண்டியவற்றை அன்புடன் அளிக்கும் இறைவன், தான் பலியிடம் யாசிக்க வேண்டியதாயிற்றே என்று தன் மேனியைக் குறுக்கிக் கொண்டாற்போல் இருக்கிறது' என்று வியக்கிறார் ஒரு-ஆழ்வார்! பலியின் குருவான சுக்கிராச்சாரியார் 'இவன் மாய வேடம் பூண்ட திருமால், இவன் கேட்பதும் பிச்சை இல்லை. உனக்குக் கேடு விளைவிக்கவே வழி செய்வான்; ஆதலால் இவன் கேட்பதைத் தராதே' எனத் தடுக்கிறார். ஆனால் பலியோ, திருமாலே நம்மிடம் வந்து இறைஞ்சுங்கால் நான் ஏன் இல்லை என்று சொல்ல வேண்டும்? இது எனக்குப் பெருமை தானே!' என அகந்தையுடன் பதில் தந்து 'தந்தேன்' என்று வாமனனின் கையில் நீரைத் தாரையாக வார்க்கக் கிண்டியைச் சாய்க்கிறான். அந்நிலையிலும் தன் அரசனைக் காக்க எண்ணிய சுக்கிரன் ஒரு வண்டு ரூபமெடுத்துக் கிண்டியின் வாயை அடைத்து நீரை வெளி வராமல் தடுக்கிறார். அதுகால் குறளன் ஒரு துரும்பால் அந்த இன்னலை நீக்குகிறார். அதனால் சுக்கிராச்சாரியார் தம் கண்ணையும் இழக்கிறார். இதனை ஆழ்வாரின் பாடல் அழகுறச்சித்தரிக்கிறது.

" மிக்கபெரும் புகழ்மாவலி வேள்வியில்
தக்கது இதுஅன்று என்று தானம்
விலக்கிய
சுக்கிரன் கண்ணை துரும்பாற் கிளறிய
சக்கரக்கையனே அச்சோ! அச்சோ'
(முதலாயிரம் 1-8-7)

இதற்குப் பிறகு நடப்பது மற்றும் விசித்திரமாயுள்ளது! கையில் தாரை

நீரை வாங்கியவுடனே, குறள் வடி வாய் சிறுமையுடன் நின்ற வாமனன், நெடிதுயர்ந்து மூவுலகனைத்தையும் தான் ஒருவனே நிறை செய்யுமள வுக்கு வளர்கிறார்! இதனை மனக் கண்ணாலேயே எல்லா நுண்ணிய விவரங்களுடனும் பார்த்து மகிழும் ஆழ்வார், அக்காட்சியின் பயனை தாமும் பெறுவதற்காகப் பாடலை யும் அருளியுள்ளார்.

"கண்டவர் தம்மனம் மகிழ மாவலி
தன வேள்விக்
களவில் மிகுசிறு குறள் ஆய்
மூவடி என்று இரந்திட்டு
அண்டமும், இவ்வலைகடலும்; அவனி
களும் எல்லாம்
அளந்தபிரான்.........
(பெரிய திருமொழி 3-10-5)

மிகப்பெரிய உருவாக வளர்ந்த வாம னன் - திருவிக்கிரமன், தன் ஒரு அடி யால் வானுலகத்தையும் அளந்து மூன் றாம் அடிக்கு இடம் எங்கே என்று பலி யையே கேட்கிறார்! அக்கணமே தானே உலகத்தின் சிறந்த தலைவன் தன்னி டம் யாசிப்பவர்க்கு இல்லையென் னாது வழங்குவதற்கான சக்தியனைத் தும் உள்ளவன் என இறுமாந்திருந்த பலியின் ஆணவம் இருந்த இடம் தெரி யாமல் போனதில் வியப்பென்ன! தெய்வமே மனிதனின் சிறுமையை உணர்த்த முற்பட்டால் இதைவிடப் பதியும்படியாகச் செய்யக் கூடிய வழி வேறு இருக்காது எனத் துணியலாம். சென்ற வினாடி வரையிற் குறள்; தன்னிடம் கூனிக்குறுகி கேவலம் மூன்றடி மண் யாசித்து நின்றவன்; இப்பொழுதோ "இரு நிலனும் பெரு விசும்பும் எய்தா வண்ணம் கடந்த" வாறு (பெரிய திருமொழி 2-5-6) கம் பீரமாய் நின்று தன்னிடம் 'நீ தந் தாயே மூன்றடி! அதில் மூன்றா மடிக்கு இடமெங்கே!' என்று கேட்கும் இறைவனின் திருவிளையாடல்களைக் கண்ட பலியின் அகந்தை ஒழிந்தது. கண்ணீர் பொங்க, 'இறைவா! என் தலையுள்ளதே' என்று தலை வணங்கி நிற்கிறான். பெருமான் அவனைப்

# சிரோன்மணி

திருமுருக கிருபானந்த வாரியார் அவர்கள் எழுதியுள்ள "வாரியார் வாழ்க்கை வரலாறு" என்ற நூலிலிருந்து

நான் நேபாளத்தில் தங்கியிருந்த பொழுது என்னுடைய ஆப்த நண்பர் திரு. வி. ஏ. பி. ஐயர் "ஒரு மகா னைப் பார்க்கலாம் வாருங்கள்" என்று கூறி என்னை அழைத்துக் கொண்டு சென்றார். அந்த வழி கார் போக முடியாத தடம். ஆதலி னால் ஜீப்பில் அழைத்துக் கொண்டு சென்றார். 40 மைல்களுக்கப்பால் மலைச்சாரல். ஒரு சிறு நதி ஓடிக் கொண்டிருந்தது. சிறிய, சிறிய, பத்துப்பதினைந்து கோயில்கள் இருந் தன. அங்கு ஒரு தடத்தில் மகான் இருந்தார். அவரை வணங்கினேன். நீண்ட நேரம் வேதாந்த விஷயமாக உரையாடினேன் - பொழுது போய் விட்டது - நான் அவரைப் பார்த்து "சுவாமி! கண்டகி நதியில் சாளக் கிராமங்கள் கிடைக்கின்றன என்று கேள்விப்பட்டிருக்கிறேன் - எனக்கு சாளக்கிராமம் வேண்டும். கண்டகி நதிக்குப் போக வழி யாது" என்று கேட்டேன்.

அவர் "கண்டகி நதி 300 மைல் தொலைவில் இருக்கின்றது - வழி கடி னமானது - உங்களால் போக முடி யாது - உங்களுக்கு சாளக்கிராமம் தானே வேண்டும்? நான் தருகிறேன்" என்று ஐந்து சாளக்கிராமங்களை அளித்தார்.

"இன்னும் என்ன வேண்டும்?" என்று கேட்டார்.

"உருத்ராக்ஷ மணிகள் வேண்டும்" என்று கேட்டேன். அவர் தன் சீட னைப் பார்த்து "ருத்ராக்ஷ மணிக ளைக் கொண்டு வந்து கொடு" என்று கட்டளையிட்டார். அவன் ஒரு சிறு கூடையில் ருத்ராக்ஷ மணிகளைக் கொண்டு வந்து கொடுத்தான்.

சுவாமிகள் அவனைப் பார்த்து "உனக்குப் பாத்திரமறிந்து கொடுக் கத் தெரியவில்லையே! நிறைய கொடு" என்று கூறினார். அவன் ஒரு குட்டிச்சாக்கு நிறைய கொண்டு வந்து கொடுத்தான்.

சுவாமிகள் கழுத்தில் வெள்ளிக் குமிழ் அணிந்து கொண்டிருந்தார் - அவர் வீரசைவமோ என்று நினைத் தேன்.

"சுவாமி! தாங்கள் மார்பில் அணிந்திருப்பது சிவலிங்கமா?" என்று கேட்டேன். அவர் புன்னகை செய்து அந்த வெள்ளிக்குமிழைத் திறந்தார். அதற்குள் தங்கக் குமிழ் இருந்தது. அதைத் திறந்து சுண்டைக்காய் அளவு வெண்மையான தந்த மணியைப் போன்ற ஒரு மணியை எடுத்து என் கையில் கொடுத்தார். "இது என்ன தெரியுமா?" என்று கேட்டார். நான் "சொன்னால் தெரியும்" என்று சொன்னேன். அவர் உரக்கச் சிரித் தார். "நீ சமர்த்தன். தெரியாது என்பதற்குப் பதிலாக, சொன்னால் தெரியும் என்றனையே! உயர்ந்த ஜாதி நாகம் ஒருவரையும் கடிக்கா மல் நீண்டகாலம் வாழ்ந்தால் அதனு டைய நஞ்சு திரண்டு நாகமாணிக்க மாக ஆகும். அது போல் சில யோகி களுக்கு யோக சக்தியினால் விந்து நழுவாமல் ஊர்த்துவரேதஸாகமேலே சென்று நின்று விளங்கினால், அந்த விந்து சிரோன்மணியாக மாறிவிடு கிறது. இந்த இடத்தில் ஒரு மகான் தவம் செய்து கொண்டிருந்தார். முடி வில் அவருடைய சிரஸ் வெடித்து இந்த மணி வெளிப்பட்டு வந்தது. அப்படி வந்த மணி தான் இது. இதற்குச் "சிரோன் மணி" என்று பெயர். இதற்கு ஒரு பரீக்ஷை உண்டு. கால்மாட்டிலே வைத்துப்படுத்துக் கொண்டால், அதுவே தலைமாட் டுக்கு வந்துவிடும். நேபாள ராஜா இதனை ஒருவாரம் வைத்துப் பரீக்ஷை செய்தார். இது மிகவும் அபூர்வ மானது" என்று கூறினார். மறுபடி யும் அந்தமணியைத் தங்கக் குமிழி யில் வைத்து அணிந்து கொண்டார். இதைக்கேட்டு நான் வியந்து நின் றேன். அதனைப் பார்க்கக் கூடிய வாய்ப்பு எனக்குக் கிடைத்ததே! என்று மகிழ்ச்சியடைந்தேன்.

தகவல்; திரு. க. ஆ. சோணாசலம்
திருவத்திபுரம்.

பாதாள லோகத்திற்கு அனுப்ப அங்கு அவன் இன்றும் அரசு செலுத்துவதாகக் கொள்வது மரபு. (சப்த சிரஞ்சீவிகள் என வழங்கப்படுமவர்களில் பலியும் ஒருவன்; அசுவத்தாமா, பலி, வியாசர், அநுமான், விபீஷணன், கிருபன், பரசுராமன் என்ற எழுவரும் சாகாவரம் பெற்றவர்கள் என அழைக்கப்படுகிறார்கள்.)

கோயில்கள்: சிற்பங்கள் :

தமிழ் நாட்டில் காஞ்சியிலும், திருக்கோவலூரிலும் திருவிக்கிரமனுக்கென்றே தனிக்கோயில்கள் உள்ளன. 'ஊரகம்' என்று பாடல்களில் இடம் பெற்ற முதல் ஸ்தலத்தில் பெருமாள் மேற்கு நோக்கிய முகமண்டலத்துடன் உலகளந்த கோலத்தில் காட்சி அளிக்கிறார். தாயார் பெயர் அமுதவல்லி; விமானம் ஸாரஸூகரம்; சேஷ தீர்த்தம்: ஆதிசேஷனுக்கு பிரத்தியக்ஷம். ஆகாயத்தை அளக்கும் தோற்றத்தில் நெடிதுயர்ந்துள்ளது. இரு கைகளும் நன்கு நீட்டப்பெற்றுத் திண்மையுடன் காட்சி அளிக்கின்றன. ஒரு கையில் விரல்கள் நீட்டியவாறு உள்ளன. இரண்டு அடி ஆயிற்று என்று கணக்கைக் காட்டுவது போல், மற்றொரு கையில் ஒரே ஒரு விரல் இன்னமும் ஒரு அடி பாக்கியுள்ளது என்பதைக் குறிக்கிறது. மற்றொரு கால், வணங்கிய பலியின் தலையின் மேல் அமைந்தவாறுள்ளதைக் காணலாம். அர்ச்சகரின் கை விளக்கின் உதவியின்றி இறைவனின் முழு உருவத்தையும் காண்பது இயலாது! திருமங்கையாழ்வார், திருமழிசை ஆழ்வார், பொய்கை ஆழ்வார்கள் மங்களா சாசனம் செய்துள்ளனர். கல்வெட்டுக்களும் உள்ளன.

தென் ஆற்காடு மாவட்டம் திருக்கோவலூரிலும் உலகளந்தான் ஸந்நிதி உள்ளது. இக்கோயிலில் சுமார் 13-ம் நூற்றாண்டிலிருந்து கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. 'கோவல்' 'மதுராந்தக சதுர்வேதி மங்களம்' என்று புகழ் வாய்ந்த இடம். பஞ்ச கிருஷ்ணாரண்ய க்ஷேத்திரங்கள் என்று வழங்கி வருபவைகளுள் இதுவும் ஒன்று. முதலாழ்வார்கள் மூவரும் சந்தித்து இறைவனின் தரிசனம் பெற்ற இடமும் இதுதான் என்பதால் இது வைஷ்ணவர்களுக்கு உகந்த யாத்திராத்தலம் ஆகிறது. ஸ்ரீகர விமானம்; மிருகண்டு முனிவருக்கு பிரத்தியக்ஷம். முதலாழ்வார்கள் மூவரும், திருமங்கை மன்னனும் மங்களா சாஸனம் செய்துள்ள இடம். வலது திருவடியைத் தூக்கியும், இடது திருவடியை பூமியில் வைத்தும், வலது கையில் சங்கும், இடது கையில் சக்கரமும் மாறி அமைந்துள்ள கம்பீரமான தோற்றமானது கண்கொள்ளாக் காட்சியாகும்.

மகாபலிபுரத்தில் வராக மண்டபம் என்று அழைக்கப் பெறும் குகையில் பலியை அடக்கும் திருவிக்கிரம கோலத்தைக் காணலாம். மிக அழகான சித்திரம். 8-ம் நூற்றாண்டில் ஏற்பட்ட எல்லோரா தசாவதாரக் கோயிலிலும், வாதாபியிலும், காஞ்சி வரதர் நூற்றுக்கால் மண்டபத்திலும், திருநீர் மலையிலும் பற்பல வாமன-திருவிக்கிரம சிற்பங்களைக் காணலாம்.

சிலப்பதிகாரம் என்னும் செஞ்சொற்காப்பியத்தை இயற்றியருளிய ஆசிரியர் இளங்கோவடிகளும், 'மூவுலகும் ஈரடியால் முறை நிரம்பா வகை முடியத் தாவிய சேவடி' என்றும், 'திரண்ட மார் தொழுதேத்தும் திருமால் நின் செங்கமல இரண்டடியால் மூவுலகும் இருள் தீர நடந்தனையே' என்றும் திருவிக்கிரம அவதாரம் பற்றிச் சிறப்பித்துப் பாடியருளியுள்ளார்.

"வாமனன் என் மரகத வண்ணன்
தாமரைக் கண்ணினன்
காமனைப் பயந்தாய் என்றென்றுன்
கழல் பாடியே பணிந்து
தூமனத்தனனாய்ப் பிறவித்
துழதி நீங்கி என்னைத்
தீமனங் கெடுத்தாய் உனக்கேன்
செல்கேன் என் சிரீதரனே.'

"திருவிக்கிரமன் செந்தாமரைக் கண்
அம்மான் என் செங்கனிவாய்
உருவிற் பொலிந்த வெள்ளைப் பளிங்கு
நிறத்தனன் என்றென் றுள்ளிப்
பரவிப் பணிந்து பல்லூழி யூழிநின்
பாத பங்கயமே
மருவித் தொழும் மனமே தந்தாய்
வல்லைக்காண் என வாமனனே".

என்று நம்மாழ்வார் நலந்திகழப் பாடியருள்கின்றார். இவ்வாறே இவ்வாமனனைப்பற்றி ஏனைய ஆழ்வார்களும் பாடியிருத்தல் காணலாம்.

தமிழில் இளங்கோ ஆழ்வார்கள், கம்பன், முதலானவர்கள், சமஸ்கிருதத்தில் ஜயதேவர், க்ஷேமேந்திரர், புரந்தரதாசர், ஸ்வாதித் திருநாள் முதலியவர்கள் போற்றிப் பாடியுள்ள இத்திருவவதாரத்தின் விவரங்களைச்சிறிதேனும் அறிந்து தெளிந்து நமது ஆணவத்தை அழித்து இறைவன் திருவருள் பெறுவோமாக.



# வட கலையும் தென் கலையும்

திரு நாராயணசுவாமி,
திருவிடைமருதூர்.

விஷ்ணுவை முதன்மையாகக் கொண்டு வழிபட்டு வருவதால் இது வைணவம் எனப் பெயர் பெற்றது. எங்கும் பரந்துள்ளவன் என்பதனால் விஷ்ணு என்று அழைக்கப்படுகின்றார். விஷ்ணுவை வழிபடுபவர் வைணவர் என்பார்கள். இருபத்தி நான்காவது தத்துவத்திற்கு மேல் 25-வது தத்துவமாக இருப்பவன் விஷ்ணு ஆவார்.

**சமயக் கடன்கள் :**

வைணவ சமயத்தைச் சார்ந்தவர்கள் இச்சமய உண்மைகளை தீட்சைகளின் வாயிலாக அறிதல் மிக முக்கியமாகும்.

**தாபம் :**

திருமாலின் சின்னங்களான சங்கு சக்கரங்களைத் தோளகளில் தரித்துக் கொள்ளவேண்டும்.

**புண்டரம் :**

நெற்றியிலும் நெஞ்சிலும் திருமண்ணும் திருச்சூரணமும் கொண்டு நாமம் இட்டுக்கொள்ளவேண்டும்.

**நாமம் :**

இது வைணவ சமயத்தின் அடியார் என்பதனை மற்றவர்களுக்குக் காட்டும் திருநோக்கமாகும்.

**மந்திர உபதேசம் :**

தீட்சையின் போது குருமூலமாகப் பெறும உபதேச தெய்வீக மந்திரமாகும்.

**யோகம் :**

விஷ்ணுவை வணங்குதற் பொருட்டு வழிபாடு செய்யும் முறை

இவ்வைந்துமஎப்பொழுதும் இறைவன் சந்நிதியில் இருப்பதாக எண்ணி வாழ்வதற்கான வழியை வகுக்கும்.

**ஆகம வகைகள் :**

இச்சமயத்திற்கு இரண்டு ஆகமங்கள் உண்டு. அவைகள் வைகானசம, பாஞ்சராத்திரம.

**வைகானசம் :**

விகனசர் எ பவரால் வைகானச ஆகமம் அருளப்பெற்றது. இவரை திருமாலின் திருமார்பில் தோன்றினவராக எணணுவர். இவர் தமது மாணாக்கர்களாகிய மரீசி, பிருகு, அத்திரி, காசியபர் என்ற நான்கு முனிவர்களுக்கும் கூறின ஆகமம் வைகானசம் ஆகும். இவ்வாகமம் 1,00,000 செய்யுட்கள் கொணடதாகும். இவ்வாகமத்தின்மூலம் எம்பெருமானைவழிபடும்முறை விளக்கப்படுகிறது. கர்மயோகத்தையும்(வழிபாட்டு முறைகள்) ஞானயோகத்தையும்(உள்ளம் தூய்மை அடைதல்) உணர்த்துகிறது. இவ்வாகமத்திலைப் பினபற்வோர் வடகலையினர் என்பார்கள. மேலும் இதனை மார்கட மார்ககம் (குரங்கும் அதன குட்டியும் போல) என்றும் கூறுவர். திருமலையிலும் ஏனையபல திருமால்கோலில்களிலும் இவ்வாகமத்தின் படி பூசைகள் நிகழ்கின்றன. வேதாந்த தேசிகரை இவ்வாகமத்தினை விளக்கியவா ஆவார்.

**பாஞ்சராத்திரம்:**

இந்த ஆகமத்தை மறை என்றே கூறுவரும உளர். இதனை திருமாலானவர் ஐந்து இரவுகளில் உபதேசித்தார் என்று பிரசன்ன சம்ஹிதை கூறுகிறது. ஆளவந்தார் பாஞ்சராத்திர ஆகம உண்மைகளையும் சிறப்புக்களையும் தமது நூலான ஆகம பிராமாண்யத்தில் விளக்குகின்றார். இவ்வாகமத்தை பின்பற்றி விஷ்ணுவை வழிபடுவோர் பாஞ்சராத்திரிகர் எனப் போற்றுவர். இந்த ஆகமத்தினைப் பின்பற்றுவோர் தென்கலையினர் என்பார்கள். இதன் மார்க்கம் மார்ஜரமார்க்கம் (பூனையும் அதன் குட்டியும்) ஆகும். இம்முறையில் பூசிக்கப்பெறும் விஷ்ணு ஆலயங்கள் தமிழ்நாட்டில் பல உளளன. ஸ்ரீரங்கம் எனப்பெறும் திருத்தலம் இவ்வாகமத்திற்கு உட்பட்டதாகும். பிள்ளை லோகாசாரியார் இவ்வாகமத்தினை மக்கள் மத்தியில் புகட்டியவராவர்.

**வடகலையும் தெனகலையும்:**

வேதாந்த தேசிகர் வைணவர்களுக்கு விளக்கிய சில கருத்துக்களால் வைணவ சமயம் இரு பிரிவுகளாயின. இவ்வேறுபாட்டின் காரணம் மொழியும இனமும் ஆகும். இவ்வேறுபாடு ஆழ்வார்கள காலத்தன்றிப் பின்பே வளர்ந்ததாகும்.

**வடகலையின் சிறப்பு :**

1. இரு பிறப்பாளர்க்கே உரியது என்பர்

2. விஷ்ணுவை சூரியனோடு தொடர்பு படுத்திச் சௌரம் என்பர்.

3. விஷ்ணுவே முதல்வன் எனக கூறி அவன் ுருவடிவங்களான சத்தியன், அச்சுதன், அநிருத் தன் எனும் மூவரைக் குறிக்கும்.

4. திருமாலின் திருக்கோயில்கள் இந்தியாவின் பல பகுதிகளில் பரவலாக அமைந்திருக்கின்றன.

5. இம்மைப் பலனையும், மறுமை நலனையும் சிறப்பித்துக் கூறு கின்றது.

6. வேதாந்த தேசிகரை சிறப்பித் துப் போற்றுகின்றது.

7. ஞான நெறி பக்தி நெறி போன்றே பிரபத்தி (சரணா கதி) யையும் ஒரு நெறியே என் பர். தாய்க் குரங்கு தனது குட்டியினை எங்கு எடுத்துக் சென்றாலும் குட்டி தாயினை பற்றிக் கொள்கிறது. அது போலவே எப்போதும் இறை வனான திருமாலின் திருவடி களை பெற முயற்சியும் பிடித் தமும் உடையவராக இருத்தல் வேண்டும் என்பர்.

8. திருமாலானவர் உயிர்களை ஆட்கொள்ளும் போது அவை களின் குற்றங்களைத் தான் ஏற் பதில்லை.

9. திருமாலையும் திருமகளையும் போற்றுவர்.

10. தாம் தனித்து நின்றும் உயிர் களை நந்நெறிப் படுத்துவதாக உலகத்தையும் உயிர்களையும் குறிப்பதற்கு "U" என்ற வடி வில் நாமம் இட்டும் நடுவில் விளங்கும் செந்நிறக்கோடு (திருச்சூரணம்) தாமாகவும் நிறறல்.

தென்கலைச சிறப்பு :

1. வைணவர்க்கான ஐம்பெரும் கடன்களை அறிதலும், வாழ்க் கையில் கடை பிடித்தலும் ஆகும்.

2. அக்னியோடு தொடர்படுத்தி அக்னேயம் என்பர்.

3. வாசுதேவனை முதற்பெருங் கடவுளாக எண்ணியும், அவனின் வடிவங்களாக உள்ள சங்கர் ஷன, பிரத்தியும்நன், அநி ருத்தன் எனும் மூவரையும் போற்றுவர்.

4. தென்கலைச் சம்பிரதாயத்தில் உள்ள கோயில்கள் மலைகளி லும் ஏனைய இடங்களிலும் (தமிழ் நாட்டிலும்) அமைந்து விளங்குகின்றன.

5 வீடு பேற்றினை மட்டும் (பரம பதம்) சிறப்பித்துக் கூறும்.

6. பிள்ளை லோகாசாரியரையும் மணவாள மாமுனிகளையும் சிறப்பித்து வணங்குவர்.

7. பூனையானது தனது குட்டி யினைப் பேணிப் பாதுகாக்கத் தானே கவ்விக் கொணடுவைத்து பாதுகாத்தல் போல, திருமால் ஒவ்வொர் ஆன்மாவையும் நல்வழிப்படுத்துகின்றார். இதனை மார்ஜர (பூனை) மார்க் கம என வழங்கப்படுகின்றது. இத்தகையநிலையினை பிரபத்தி மார்க்கம் என்பர். எல்லாம் அவனது கருணைதான் என்று அவன் திருவடிகளை நினைந்து உருகுதல் என்பர்.

8. உயிர்களின் குற்றத்தைப் பொருத்து அநுக்கிரகிப்பவர் என்பர்.

9. அரசு, அமைச்சு என்ற நிலை யில் திருமாலையும், திருமகளை யும் போற்றுவர்.

10. திருமாலின் திருவடிகள் தாம ரையில் விளங்குவதாக திருமண் இடும்போது பாதம் வைத்து நாமம் இட்டுக் கொள்ளுதல் ஆகும்.

வைணவ இறைக்கொளகை :

ஆதியாகவும், அருவமாயும் நீக்க மற நிற்கும் ஞானமூர்த்தியாகவும் விளங்கும் திருமாலானவர் உயிர் களின் மேல் கொண்ட கருணை யினால் தான் விரும்பியபடி மீன் (மட்ச அவதாரம்) முதலான திரு மேனிகளை எடுத்தும், வேதத்தை அருளியும் செய்தார்.

திருவவதாரங்கள் :

திருமால் இவ்வுலகைக் காத்தற் பொருட்டு மின், ஆமை, பன்றி, நர சிங்கம், வாமனன், பரசுராமன், இராமன், பலராமன், கிருஷ்ணன் முதலான திருவுருவம் தாங்கி அருள் பாலித்துள்ளான்.

அமுதீந்த வளளல் பிரான :

தேவர்களுக்கு நிலையான வாழ் வளிக்கவேண்டி பாற்கடலைக்கடை யச் செய்துஅமுதத்தினை அத்தேவர் களுக்கு அளித்தான். கொடிய தொழில்களை மேற்கொண்ட அசுரர் களைக் கொன்று உலகத்தைக் காத் தும், மெய்ப்பொருளை அடியார் களுக்கு உணர்த்தியும், எல்லாவற்றிற் கும் தலைவனாய் விளங்குகின்றான்.

திருமாலின் சிறப்பு :

இவ்வுலகத்தைப் படைக்கும் காலத்தில் மாயையும், அதன் வழி மயங்கும் உயிர்களையும், அவ்வுயிர் களைக் காட்டும் தத்துவமாயும் நிலைபெற்றுப பின் அம்மாயையி னின்றும் உயிர்களை நீக்குவன். மாய னது அருளின்றி மாயை நீங்காது, அவனை வணங்கி வழிபடவே மாயை நீங்கும். மாயை நீங்கின உயிர்களை வைகுண்டத்தில் சேர்க்கின்றான்.

மார்க்கம் :

தென்கலையாயினும், வடகலையா யினும் அடியார்கள் திருமாலின் திரு வடிகளை அடைவது மட்டுமே தம் குறிக்கோளாகஎண்ணி வருகின்றனர். நதிகள் பல இடங்களிலிருந்து தோன் றினாலும் கடைசியில் கடலை அடை வது போல அடியார்கள் எத்தகைய வழியினைமேற்கொண்டாலும் அடை வது இறைவன் திருவடியினையே ஆகும்.



# திருமாலின் அவதாரம்

அறத்தின நாயகனான திருமால் உயிரளிப்பான வேண்டி அவதரித்தருளுகின்றான் என்பதுவேத நூல் துணிபு. எல்லாம்வல்ல திருமால் தேவன் தனது உயர்வற உயர்ந்த நிலையிலிருந்து தாழ்ந்த நிலைக்கு வந்தருளுவதை அவதாரம் என்று போற்றப் பெறுகின்றன. அவதாரம் என்பது கீழிறங்குதல் என்ற பொருளாகும் என்றாலும், இங்கு இறைவனது அவதாரம் என்றால் வானவெளியிலிருந்து கீழே இறங்குதல் என்று பொருளாகாது. அவ்வாறு கொள்ளுதல் கூடாது.

காலத்தாலும் இடத்தாலும் வரையறுக்கப்படாமல் எங்கும் நீக்கமற நிறைந்து (வியாபித்து) நிற்கும் பரம்பொருள் ஒரு காரணத்தைக் கருதி, தன் இச்சையால் காலத்தாலும் இடத்தாலும் வரையறுக்கப்பட்ட ஒரு வடிவம் தாங்கி வந்து தோன்றுதல் என்பதே அவதாரம் என்ற சொல்லின் பொருளாகும்.

அவதாரத்தைப் பிறப்பு என்று கூறுவதும் ஆகாதவதும் கூடாது. என்றாலும் சில இடங்களில் அவதாரத்தைப் பிறப்பு என்று கூறப் பெறுவது உண்டு. அதனை மரபு வழுவமைதியாகக் கொள்ளுதல் வேண்டும்.

இறைவன் அவதரித்தருளுகின்றான் என்ற பெரியதோர் உண்மையைத் தன்னகத்தே உடையதே,இந்து மதத்தின் பெருஞ் சிறப்பியல்பாகும்.

குற்றமற்ற வேதங்களாலும், வேத நூலுணர்ந்த முனிவர்களாலும். வேதம் தமிழ் செய்த மகாமதிகளாலும் இறைவன் அவதரித்தருளுகின்றான் என்ற கொள்கை பெரிதும் ஓம்பப்பெறுகின்றது.

வேதாந்த மதங்கள் என்று சொல்லப்பெறுகின்ற, துவைதம் அத்வைதம், விசிஷ்டாத்வைதம் மூன்று பெரு மதங்களும் இறைவன் அவதரிக்கின்றான் என்ற கொள்கையை பெரிதும் ஆதரித்தும்வற்புறுத்தியும் வலியுறுத்தியும் இருக்கின்றன.

சனாதன மதங்கள் என்னும் மேற்கூறிய மூன்று மதங்களின் (சமயங்கள்) ஆசாரியத் தலைவர்களான ஸ்ரீசங்கராச்சாரியார், ஸ்ரீமதவாசாரியார், ஸ்ரீ இராமானுஜசாரியார் என்ற மூன்று பெரியோர்களும் இறைவனது அவதாரங்களை ஆதரித்தும், ஈடுபட்டு, அவ் அவதாரங்களைத் தஞ்சமாகப்பற்றியும், உபாசித்தும், உபதேசித்தும் இருக்கின்றனர்.

வைதிக சமயங்களாலும், வைதிக கோத்தமர்களாலும் கொண்டாடப் பெறும் கற்றார்க்கோர் பற்றாகும் பெற்றியன.

சாக்ஷாத்தர்மம் ஸ்ரீ கண்ணனெம்பெருமானேயென்று பேரறிவாளர்கள் அறுதியிட்டுள்ளனர்.

அவதரிக்காது போனால் அவன் பரம்பொருளாகான் என்பது பக்தியுடையார்களின் கொள்கை. பழந்தமிழ் நூல்களில் திருமாலின் திருவவதாரங்கள் மிகவும் போற்றிப்பரவப்பெறுகின்றன.

பரிபாடல் என்னும் பழந்தமிழ் நூலின்கண் திருமால் மேற்கொண்ட அவதாரங்கள் பல கூறப்பெற்றுள்ளன. மேலும் இறைவன் அவதாரங்களை மேற்கொள்ளும் காரணமும் மிக அறபுதமாகக் கூறப்பெற்றுள்ளன.

"முதனமுறை இடைமுறை கடைமுறை
தொழிலில்
பிறவாப் பிறப்பிலை பிறப்பித்
தோரில்லையே"

என்று பரிபாடல் செப்புகின்றது. முதன்முறை இடைமுறை, கடைமுறைத்தொழில் என்பது படைத்தல் காத்தல், அழித்தலாகிய முத்தொழில்களையும் நடத்துவதற்காக இறைவன் பிறவாத பிறப்பில்லை என்றும், அவ்வாறு இறைவன் பிறந்தாலும் அவனைப் பிறப்பித்தவர் ஒருவரும் இல்லையென்பதும் மிகத்தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

உயிர்கள் தாம்தாம் செய்த புண்ணிய பாவங்கள் காரணமாக அவற்றின் பயனை அனுபவிக்க இறைவனால் பிறக்கப்படுகின்றன. இறைவனுக்கோ இவ்வாறான புண்ணிய பாவமாகிய வினை ஒரு சிறிதும் இல்லாமையால், அவன் பிறப்பதற்கு அவனது இச்சையே காரணமாகின்றதால் பிறப்பித்தோரில்லையே என்றமை பெரிதும் சிந்திப்பதற்குரியது.

---

**புலவர் பொன். சுப்பிரமணியன்**
*திருக்கண்ணபுரம்.*

---

"பிறப்பித்தோரிலையே" என்றமையால் திருமாலுக்கு மேற்பட்டநோர் தெய்வம் இல்லையென்பதும்,அவனே பரம்பொருள் என்பதும் நன்குபெறப் படுகின்றது.

மேலும் பரிபாடலில் மற்றோரிடத்தில்

"இருவர் தாதை இலங்கு பூண் மாஅல்
தெருள நின்வர வறிதல்
மருளறு தேர்ச்சி முனைவர்க்கு
மரிதே"

என்று கூறப்படுகின் து. தேவாதி தேவனை திருமால மேற்கொள்ளும் அவதார காரணத்தை ஐயம்திரி பின்றி உணர்ந்த மெய்ஞானியரான முனிவர்களாலும் உணர்ந்து கொள்ளுதல் அரிதாகும் என்பது இதன் பொருளாகும். அவதாரம் என்றால் மேலிருந்து கீழிறங்குதல் என்று பொருளாதலின் அதற்கேற்ப, "தெருள நின்றிருப்பறிதல்" என்று கூறியுள்ளமை எண்ணம் புகுந்து இத் திக்கத்தக்க பெருமையாகும்.

"பிறப்பில பல பிறவிப் பெருமானை
மறப் பொன்னின்றி என்றும்
மகிழ்வனே"

என்பது ஆழ்வாரருளிச் செயலாகும்.

இத்திருவாய்மொழியின் கருத்தும் கொள்கையும் அப்படியே பரிபாடலில் கூறப்பட்டுள்ளது காண்க.

"என்பிறவி யான தியமபிற் பலவாகும்
உன் பிறவி யானவையும் ஓங்குமவை—
தன்படியை
யான் அறிவன் எல்லாம் இகல்விசயா
ஈங்குநீ
தான் அறியாய் அத்தகைமை தான்"

என்றும்.

மேவு பிறப் பில்லனுமாய்
மெய்த்தன்மை குன்றானாய்
மூவுலகுக் கெண்ணும்
முறையிறையாம்—தேவுடனே
என்னுடைய மூர்த்தியினை
யெய்தியே என்னினைவு
தனையியல்வாலே பிறப்பான் சார்ந்து

என்றும்,

"அறந்தளரும் அக்காலம்
எக்காலம ஆங்கே
மறங்கிளர்ந்து பாவம்
வளரும் பிறங்கரசர்
வெந்நைத் தருவிக்கும்
வில்விசயா வக்காலத்
தென்னைப் பிறப்பிபபன் யான்!"

என்றும் சாட்க்ஷாத் தர்மமான ஸ்ரீ கண்ணனெம்பெருமாள் ஸ்ரீகீதையில் அருளிச் செய்துள்ளமையும் காண்க.

"மேலொரு பொருளு மில்லா
மெய்ப்பொருள வில்லுந்தாங்கி
காலதரை தோய நினறு
கட்புலக் குற்றதம்மா
மாலதரும் பிறவி நோய்க்கு மருந்து"

என்றும்,

"மறைகளு முனிவர் யாரும்
மலர் மியையனும மற்றைத்
துறைகளின் முடிவும் சொல்லும்
துணிபொருள் துணிவில் தூக்கி
அறைகழல் இராமனாகி
அறநெறி நிறுத்தவந்த இறை"

என்றும்,

"அறந்தலை நிறுத்திவேதம் அருள்
சுரந்தறைந்த நீதித்
திறந்தெரிந் துலகம்பேண
செந்நெறி செலுத்தித் தீயோர்
இறந்துக நூறித் தக்கோர்
இடர்துடைத் தேக வீண்டு
பிறந்தனன் தன் பொற்பாதம்
ஏத்துவார் பிறப்பறுப்பான்"

என்றும் ஸ்ரீ கம்பநாட்டாழ்வார் அருளிச் செய்துள்ளதும் எண்ணி எண்ணி மகிழதற்குரியது. படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களை நடத்துவதற்குப் பிறவாப்பிறப்பிலை என்று பொதுவாகக் கூறினாலும இறைவன் இராமகிருஷ்ண அவதாரங்களை மேற்கொண்டு செய்த அருஞ்செயல்கள் என்னவென்பதைப் பரிபாடல் மிகத்தெளிவாக எடுத்துக் கூறும் அழகினை என்னென்பது?

"நல்லாகள தம்மை
நலம்புரிந்து காத்தற்கும்
பொல்லாரைப் பொன்றுநெறி
போக்கற்கும்—சொல்லாரும்
முந்தையறம்நாட்டம் உய்த்தறகும்
நான் பிறப்பன்
இந்தவுகந் தோறும் இசைந்து'

என்று ஸ்ரீ கீதையில் அருளிச் செய்யப்பட்டிருப்பினும், நல்லோரைக் காத்தலும் அறத்தை நிலைநிறுத்தலுமே எம்பெருமானுடைய முக்கியமான திருவுள்ளக்கருத்தாகும். தீயோரையழித்தல் என்பது முக்கிய கருத்தன்று. "நெற்செய்யப்புற்றேயும்" என்பதுபோல இடையே வந்துசேரும் வேறு கருத்துமாகும்.

இதனைப் பரிபாடல் கூறும் திறம் எண்ணி மகிழுதற்குரியதாகும்.

"பொருவேம் என்றவர்
மதந்தபக் கடந்து
செருமேம் பட்ட செயிர்தீர்
அண்ணல்"

என்பது பரிபாடல். "தீயோரையழிக்காமல் நல்வழிப்படுத்தப் பல வகையாலும் முயன்றும், அவர்கள் நல்வழிப்படாமல் யுத்தம் செய்தே தீருவோம் என்று எதிரம்பு கோத்தவிடத்து, அவர்களை அழிக்கின்ற குற்றமற்ற தலைவனே" என்பது இவ் வடிகளின் கருத்தாகும். தீயோரைத் திருத்த முடியாத விடத்துத் தவிர்க்க முடியாத நிலையில் தான் அவர்களையழிக்கின்றான் என்பது தோன்ற அங்ஙனம் அழித்த பெருமானை "செயிர் தீர் அண்ணல்" என்கின்றார். இதனால் அப்படித் தீயோரை அழிக்காமல் விட்டிருந்தால் அப்பெருமான் குற்றமுடையவனாவான் என்பதும் அறியத்தக்கது. இதனால் தீயோரை அழித்தல் (துஷ்ட நிக்ரஹம்) எம்பெருமான் கருத்தன்று என்பதும, நல்லோரைக் காத்தல் (சாது சம்ரக்ஷணம்) அறத்தை நிலை நிறுத்தலுமே (தர்ம ஸ்தாபனம்) அவன் திருவுள்ளமாகும் என்பதும் அறியத்தக்கனவாகும்.



# உள்ளமே பெருங்கோவில்

திரு. ஜி. ரெங்கராஜு
திண்டுக்கல்.

ஆண்டவனுடைய படைப்பில் எண்ணற்ற உயிரினங்கள் இருக்கின்றன. இந்த உயிரினங்களில் மிக உயர்ந்த உயிரினமாகமதிக்கப்படுவது மனித இனம். இதைவிட சிறந்த உயிரினங்கள் உலகில் கிடையாது.

மற்ற உயிரினங்களுக்கு ஐந்து அறிவுதான் உண்டு. ஆனால் மனித இனத்திற்கு அதிகமாக ஓர் அறிவு ஆண்டவனால் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த மனிதப்பிறவி கிடைப்பதற்குமுன், இந்த உயிர் பல நிலைகளைத் தாண்டி வந்திருக்கிறது என்பதை மாணிக்கவாசகப் பெருமான் நமக்குச் சுட்டிக காட்டுகிறார்.

> புல் ஆகிப் பூடாய்ப்
> புழுவாய் மரமாகிப்
> பல்விருகம் ஆகிப்
> பறவையாய்ப் பாம்பாகிப்
> கல்லாய் மனிதராயப்
> பேயாய்க் கணங்களாய்
> வல் அசுரர் ஆகிப்
> முனிவராய்த் தேவராய்ச
> செல்லாஅ நின்றஇத்
> தாவர சங்கமத்துள்
> எல்லா பிறப்பும்
> பிறந்து இளைத்தேன

கிடைத்தற்கரியதான இந்த மானிடப்பிறவியை மனம் போன போக்கில் போகவிடாமல் கட்டிக் காப்பதும், தன் உடலிலுள்ள ஆத்மா அழிவு அற்றது என்பதையும் அறிந்து கொண்டால் வாழ்வில அமைதி கிடைக்கிறது. நமக்குக் கொடுத்துள்ள இந்தஉடல் மிகவும் வினோதமானது. எலும்பு, நரம்பு, தோல், இரத்தம், மாமிசம் முதலிய கூட்டுப்பொருள்களால் உண்டாகியது. இந்த உடலுக்கு ஓர் உன்னதமான சிறப்பும் உண்டு. ஒன்பது துவாரங்களில் இந்த உடலில் காற்று வந்து போய்க் கொண்டு இருப்பது ஓர் ஆச்சரியமல்லவா?

மனித தேகத்தை ஓர் இயந்திரத்திற்கு ஒப்பிடலாம். உடலிலுள்ள ஒவ்வொரு பாகமும் அவைகளுக்கு ஏற்பட்ட வேலையைச் செய்கின்றன. கண் பார்க்கிறது. காது ஓசையைக் கேட்கிறது. மூக்கு சுவாசிப்பதற்கு வழிவிடுகிறது. வாய் சுவைக்கிறது. தோல் தொடுதல் உணர்ச்சியை நமக்குஏறபடுத்துகிறது. இப்படிஐந்து புலன்களும்செயலாற்றுகின்றன. இந்த ஐந்து புலன்களுக்கு மேல் ஆறாவது புலன் அல்லது அறிவை ஆண்டவன் கொடுத்திருக்கிறான். அது மனம் என்ற ஒப்பற்ற கருவி. மனிதனின் மனத்திற்கு உள்ள வலிமை மிகப் பெரியது. எல்லா புலன்களையும் கட்டுப்படுத்தும் சக்தி இந்த மனத்திற்குத்தான் உண்டு. இதன் சிறப்பை உணர்ந்த பெரியோர்கள் "மனமது செம்மையானல் மந்திரம் ஜெபிக்க வேண்டாம்" என்று கூறியுள்ளார்கள். எண்ணங்கள், உணர்ச்சிகள், குணங்கள், வாசனைகள் எல்லாம் நிறைந்த இடம் மனம். மனம் அடங்குவது சுலபமல்ல என்பதைச் சுட்டிக் காட்ட, பெரியோர்கள் மனத்தை ஓர் குரங்கிற்கு ஒப்பிட்டார்கள். நல்ல நிலத்தை உழுது மண்ணை சீர்படுத்தி, நீர் பாய்ச்சி, உரம் இட்டு, நாற்று நடுவார்கள். பயிர் முளைத்து வருகையில் அதனூடே வேண்டாத களைகளும் முளைக்கும். அவற்றைப் பிடுங்கி வெளியில் எறிந்து விடுவார்கள். அதுபோல, இந்த மனமானது நல்ல எண்ணங்களையும் தீயஎண்ணங்களையும் சதா உற்பத்தி செய்துகொண்டே இருக்கும். ஆகவே தீய எண்ணங்களை மனதிலிருந்து அறவே நீக்கி விடவேண்டும். மனம் அல்லது உள்ளம் உயர்வடையும் பொழுது அங்கு ஆன்ம பிரகாசம் ஏற்படும். மனதில் ஆன்மா என்ற ஓர் சூட்சுமமான பகுதி உண்டு. இதைக கண்ணால் காண முடியாது. இந்த ஆன்மாவிலிருந்துமனம் சிலசக்திகளைக்கடன் வாங்கிப் பிரகாசிக்கச் செய்கிறது. "மனம் போல் வாழ்வு" என்று சாதாரண வழக்கில் கூறுவார்கள் மனம் எதை விரும்பி பின்பற்றுகிறதோ நாளடைவில் அது அதன் மயமாகி விடுகிறது. மனமான சுரங்கத்தில் அவன் விரும்பிய பொருள் எல்லாம் இருக்கிறது.

ஆனால் நம் உடலிலுள்ள பல சக்திகள் நம்மை ஆட்டிப்படைக்கின்றன. அந்த ஆட்டிப்படைக்கும் சக்திகளுக்குத் தலைமை தாங்குவது மனம். இந்த மனமானது புலன்களுக்கு இடையில் இருந்து செயல் படுகிறது. மனிதன் நடமாடும் கோவில் என்று பட்டம் சூட்டி மகிழ்கிறோம். உணமைதான். ஆனால் பிறந்த மனிதர்களில் ஒரு சிலர்தான் நடமாடும் கோவிலாக மதிக்கப்படுகிறார்கள். மற்றவர்கள் நிலையைப் பார்க்கையில் வாழவேண்டிய நெறி முறைகளை அறியாமல், பிறந்தது உணவு உண்பதற்கும், சுகபோகங்களை அனுபவிப்பதற்கும் ஏற்பட்டதே இந்த உடல் என்ற முடிவிற்கும வந்துவிடுகிறார்கள். புறவாழ்வில் சதா சென்று கொண்டிருக்கும் அவனது மனத்தை அகவாழ்விற்கும் திருப்ப முடியவில்லை.

மனிதனுடைய வாழ்க்கைஆசைகள் நிறைந்தது. சொத்து சுகங்களைப் பெற்று அனுபவிப்பவன், வேறுஏதோ இல்லை என்று கதறுகிறான். செல்வம் இல்லாதவனுக்குச் செல்வம் கிடைக்கவில்லையே என்ற கவலை அவனை வாட்டுகிறது. மனிதப் பிறவி கிடைத்தபின் செய்த செயல்

# தி. தி. தேவஸ்தான சமய நூல்கள்

## தமிழ்

| | | ரூ. காசு. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் (ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன்) | 0—50 |
| 2. | ஏழுமலை யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3 | அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொன். சௌரிராஜன் டாக்டர். கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. | பகவத் சந்தேசம் (தமிழாக்கம்) டாக்டர். பொன் சௌரிராஜன் | 0—50 |
| 5. | இந்து சமயக் கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. | நித்யாநுஸந்தானம் (வடகலை) | 4—00 |
| | நித்யாநுஸந்தானம் (தென்கலை) | 4—50 |
| 8. | கண்ணன் பேசுகிறான் —நஜன் | 0—50 |
| 9. | சுவாமி பட்டினத்தார் டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு | 1—00 |
| 10. | முக்கவி கண்ட காப்பியம் — டாக்டர். டி. ஜி. அனந்த சுப்ரமண்யம் | 12—00 |

## சம்ஸ்கிருதம்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேஸ்வரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம் | 0—62 |
| 2. | அலங்கார ஸங்ரஹம் —சி. கே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. | கடோபநிஷத் —டாக்டர். கே. சி. வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. | க்ரியாதிகாரா — தொகுத்தவர் : டாக்டர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. | மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. | ப்ரஸ்னோபநிஷத் | 11—00 |
| 7. | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | 0—12 |
| 8. | சீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. | தத்வ சாங்க்யானம் —திரு. ஆர். ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10. | பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா | 30—00 |

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஓ. மூலமாக அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூலமாக நூல்களை அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "மக்கள் தொடர்பு அலுவலர், நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

கள், அதற்குமுன் செய்த செயல்கள் ஆக இரண்டுவித வினைத் தொகுப்புகள் மூலம் அவனுடைய குணம் அமைகிறது. எந்தச் செயலைச் செய்தாலும் எண்ணத்தால், சொல்லால், செயலால் அதற்கு ஓர் விளைவு உண்டு. அந்த விளைவு இன்றே வரலாம், நாளையே வரலாம், சிறிது பொறுத்தும் அல்லது சிலவருஷங்களுக்குப் பின்னும் வரலாம். உள்ளத்தில் நிரந்தரமாக ஒரு தெய்வக் கனல் உள்ளது. அது மூலாதாரத்தில் பாம்பு போல் சுருண்டு உறங்குகிறது. அந்தக் கனலைத் தியானம், ஜபம், ஆத்ம விசாரம் முதலிய சாதனங்களால்எழுப்பி விழிப்புறச்செய்து வந்தால், உடம்பு,உள்ளம், உயிர் இம் மூன்றும் தெய்வீக நிலைக்கு நம்மை அழைத்துச் செல்லும்.

யோகிகள், ஞானிகள் போல் பிராணாயாமம், தியானம் முதலியவை எல்லோராலும் செய்ய முடியாது. அப்படி செய்ய முடியாதவர்கள் ஆண்டவன் ஒருவன் உண்டு, அவன் நம்மைக் காப்பான் என்ற நம்பிக்கையுடன் கூடிய எண்ணத்தை தெய்வத்தினிடம் செலுத்தி வந்தால், மனம் கூடிய மட்டில் அழுக்குப்படாமல் இருக்கும். பேரின்பம் என்பது வெளியில் இல்லை. நம்முடைய உள்ளத்தில்தான் இருக்கிறது. இறைவன் கொடுத்த இந்த உடலை அவன் வாழும் ஆலயமாக மாற்ற வேண்டும் என்பதை எல்லா மதங்களும் கூறுகின்றன. உடலை ஆலயமாக வைத்துக்கொள்ள வேண்டிய அவசியத்தை திருமூலர் கூறுகிறார்.

உள்ளம் பெரும் கோவில் ஊனுடம்பு
ஆலயம்
வள்ளல பிரானுக்கு வாய்கோபுர வாசல்
தெள்ளத் தெளித்தார்க்கு சீவன
சிவலிங்கம்
கள்ளப்புலன் ஐந்தும் காளா
மணிவிளக்கே

மனிதன் மனிதனாக மட்டுமின்றி தேவனாகவும் ஆகமுடியும் என்பதை நம் நாட்டில் சிறந்த மகான்கள் அனுபவித்து அறிந்து மற்றவர்களுக்கும் அறிவித்துவிட்டுப் போயிருக்கிறார்கள். 

பார்க்குமிடமெங்கும் நீக்கமற நிறைந்துள்ள பரம்பொருளை அடியவர்கள் தங்களுக்கு வேறாக உள்ள பொருளாக எண்ண மாட்டார்கள். தங்களது உடல் பொருள் ஆவி அனைத்தும் எம்பெருமானின் உடைமைகளாகி விடும். எனவே உடைமைக்கு ஏற்படும் நன்மை தீமைகள் எல்லாம் உடையவனையே சேரும். உடைமையாகியவர்களைச் சேராது.

அன்றே என்தன் ஆவியும் உடலும்
உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் என்னை ஆட்
கொண்ட
போதே கொண்டிலையோ
இன்(று)ஓர் இடையூ(று) எனக்(கு)
உண்டோ
எண்தோள் முக்கண்எம்மானே

# வான் உயர் இன்பம்

நன்றே செய்வாய் பிழை செய்வாய்
நானோ இதற்கு நாயகமே

என்று மணிவாசகப் பெருமான் கூறுவதிலிருந்து இறைவன் நன்மையைச் செய்தாலும் தீமையைச் செய்தாலும் அவற்றைச் சமமாக ஏற்றுக் கொள்ளும் மனப்பக்குவம் பெற்றவர்கள் அடியவர்கள் என்பது உண்மையாகிறது. இவ்வுடலோடு கூடியிருக்கும் ஆன்மா எப்போதும் இறையருளிலேயே திளைக்கத் திண்ணமாயிருப்பதால் உலகியல் வாழ்வில் விளையும் நன்மை தீமைகளை ஆராய முற்படுவதில்லை. ஏனென்றால் ஆன்மா ஒரு அதிகாரியாக இருக்க விரும்புவதில்லை.

அருளாளர்கள் கடல் சூழ்ந்த இந் நிலவுலகில் பிறப்பெடுப்பதன் நோக்கமே பிறவி யென்னும் பெருங் கடலை நீந்திக் கடப்பதற்குத்தான் துன்பம் நிறைந்த இவ்வுலகில் புலன் வழி வாழ்வும், மனநெறி வாழ்வும் வாழ்ந்து அல்லல் படாமல் ஆன்ம நெறி வாழ்வில் திளைத்து இறைவனின் புகழினையே என்றும் பாடி இம்மையில் இனிதே வாழ்ந்து மறுமையில் இறைவனுடன் இரண்டறக் கலப்பதே இன்னுயிர் பெற்றதன் பயன் என்பதை அருளாளர்கள் அழகுத் தமிழில் வெளிப்படுத்துகின்றனர்.

வாய்கொண்டு மானிடம் பாடவந்
தகவி யேனல்லேன்
ஆய்கொண்டே சீர்வள்ளல் ஆழிப்
பிரானெனக் கேயுளன்
'சாய்கொண்ட இம்மையும் சாதித்து
வானவர் நாட்டையும்
நீ கண்டுகொள்' என்று வீடும் தரும்
நின்று நின்றே

என்று நம்மாழ்வார் திருவாய்மொழிந்து அருளுவதிலிருந்து பரம்பொருளை உள்ளகத்தே நினைத்து உருகினால், அழிந்து போகும் மானிடரைப் புகழாமல் ஒளி பொருந்திய இம்மை வாழ்வைச் செம்மையாக அனுபவித்துப் பின் பாற்கடலில் துயின்ற பரமன் அருளால் வானவர் நாட்டையும் எளிதில் அடைய முடியும் என்பது கருத்து.

இதே கருத்தினை சுந்தரமூர்த்தி நாயனாரும் கீழ்க்கண்டவாறு தெரிவிக்கின்றார்: தம்மையே மிகுதியும் புகழ்ந்து இச்சகமாகப் பேசினாலும், எப்போதும் தம்மை அடுத்திருந்தாலும், உண்மைத் தொண்டருக்குத் தரமாட்டாத பொய்ம்மையுடைய அற்ப மானுடரைப் பாடாமல், என் அப்பன் எழுந்தருளியிருக்கக் கூடிய திருப்புகலூரைப் பணிந்து புலவர்கள் ஏத்திப் பாட வேண்டும். அவ்வாறு பாடினால், இம்மையில் தேவைப்படும் இனிய உணவும், உயரிய உடையும் அவன் அவசியம் தருவான். இவ்வகையால் இறைவனைத் துதித்தல் ஏற்புடையது ஆகும். அதனால் துன்பங்களையெல்லாம் போக்கிக் கொள்ளவும் ஏதுவாகும். மறுமையில் நிச்சயம் சிவலோகத்தை நம்முடையதாக அவன் திருவருளின் துணையுடன் ஆளுவதற்கும் சிறிய ஐயம்கூட தேவையில்லை.

எல்லாம் தெய்வச் செயல் என்று எண்ணி மனமகிழ்வு கொள்ளும் அதே வேளையில், உலகியல் துன்பங்களும், தீயவர்களின் கொடூரச் செயல்களும் தெய்வத்தினால்தான் ஏற்படுகின்றதா என்று அருளாளர்கள் சிந்திக்காமல் இல்லை. இன்பம் துன்பம், செல்வம் வறுமை, நன்மை தீமை ஆகிய இவ்வுலகியல் நிகழ்வுகள் ஆன்மாவை இறைவன்பால் செல்லாமல் தடுப்பதை எண்ணிநொந்து அவற்றிலிருந்து விலகி பற்றற்ற வாழ்வு வாழ்ந்துஎம்பெருமானின் கருணைக் கடலில் மூழ்க வேண்டும் என்பதே அருள்நிலை பெற்றவர்கள் நமக்குக் கூறும் அறிவுரை. இந்தளூரில் எழுந்தருளியிருக்கும் பெருமானைநோக்கித் திருமங்கையாழ்வார் பாடுகின்றார்.

டாக்டர். ஆர். கோபாலகிருஷ்ணன்,
சென்னை-5.

சொல்லாது ஒழியகில்லேன் அறிந்த
சொல்லில் நும் அடியார்
எல்லாரோடும் ஒக்கஎண்ணி யிருந்தீர்
அடியேனை
நல்லார் அறிவீர்தீயார் அறிவீர்நமக்கு
இவ்வுலகத்தில்
எல்லாம் அறிவீர்ஈதே அறியீர்
இந்தளூரீரே.

அதாவது எம்மைப் பிற அடியாருடன் இணைத்தே எம்பெருமான் எண்ணியிருக்கிறார். உலகியலில்

விருப்பு கொண்டு இறைவன் துணை வேண்டாத தியர்கள் பற்றியும், உலகியலை ஒதுக்கி இறைவன்பால் மாறாக்காதல் கொண்டு ஒழுகும் நல்லவர்களையும் எம்பெருமானே அடையாளம் கண்டு கொள்வார். ஆகவே எமது தற்போதைய நிலைமை ஒன்றைத்தானா அவா அறிந்து கொள்ள மாட்டார் என்பதாகும்.

ஆழ்வார் பெருமகனார் ஒருவர் சான்றோர்க்கு உயர்ந்த துணையாகிய சிவந்த கண்களுக்கு அதிபதியான திருமாலின் திருநாமத்தை மறந்திருப்பவர்களை நாம மனிதர்களாகக் கருத மாட்டோம். எனவே அனைவரும் மனிதர்களாக வாழ வேண்டுமானால் தருமத்தைத் தாங்கும் தகுதி பெற்ற மாதவனே என்று எண்ணும்படி மனத்தைப்பழக்கிப்பின் அவனுடைய திருநாமங்களை நாவினால் உச்சரிக்க வேண்டும்என்கிறார். அதாவது எப்போதும் மனம் மறந்தாலும் நா மறவாது நாராயணனுடைய புகழ் பாட வேண்டும் என்பதாகும்.

யானும் நீதானே யாவதோ மெய்யே
அரு நரகவையும் நீ யானால்
வானுயர் இனபம் எய்தி லென்?
மற்றை நரகமே யெய்திலென்?
எனினும்
யானும்நீ தானாய்த் தெளிதொறும்
நன்றும்
அஞ்சுவன் நரகம நானடைதல
வானுயர் இன்பம் மன்னி
வீற்றிருந்தாய்
அருளு நின் தாள்களை எனக்கே

என்று வரும் திருவாய்மொழிப் பாசுரத்தில் நமமாழ்வார் மிகத் தெளிவாக ஆண்டாள் அடிமை நிலையினை எடுத்துக் கூறுகிறார். 'யானும் நீயேயாய் இருப்பது உண்மையாகும். ஐயமில்லை. எனக்குத் தொல்லை தரும் இவ்வாழ்வினைக் கடத்தற்கு அரிய கொடுந்துன்ப மயமான நரகம் போன்ற எல்லாப் பொருள்களும் நீயே ஆகின்றனை. இந்நிலையில் நீ போய் பரம பதத்தில் இருந்து கொண்டு அளவற்ற இன்பம் பெறுவது ஏன்? நரகம் போன்ற இவ்வாழ்வில் இருக்கில் என்? எனினும் உடையவன் வைத்த இடத்தில் கிடத்தலன்றோ எனக்குச் சொரூபம். யானும் நீயே என்கிற தெளிவு என்னிடம் தோன்றத் தோன்ற உலக வாழ்க்கை என்னும் நரகத்தை அடைதலை மிகவும் அஞ்சுகின்றேன். பரம பதத்தில் மனம் வாக்குக்கு எட்டாதபடி உயர்ந்த ஆனந்தத்தில் நிலை பெற்று அனைத்திற்கும் உடையவனாய் பெருமையோடு எழுந்தருளயிருப்பவனே! அவ்வாழ்க்கையிலே நித்தியர்கள் அனுபவிக்கும் உன் திருவடிகளை எனக்குத் தந்தருளுக,' என்று விளக்குகின்றார்.

எனவே இறைவனோடு பொருந்தியிருப்பதே இவ்வுலகில் இன்பம். இவ்வுலக வாழ்க்கை நரகம் போன்றேயிருப்பினும் 'நாம் மேவியிருப்பது நாராயணனே' என்று எண்ணி உள்ளும் புறமும் அருள் வாழ்வில் திளைப்பதே ஆனந்தம என்பதை அருளாளாகள் அழகுத் தமிழில் நமக்கு விளக்குகின்றனர். நன்மை தீமை, நல்லவர் கயவர் என்பதெல்லாம் உலகியல் தீர்மானத்தில்தான் உண்டே தவிர அருள் வாழ்வில் இறைவனின் கண்ணோட்டத்தில் அனைவரும் ஒன்றே என்ற நிலை தோன்றும். 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்பதும் இதனால்தான்.

## பொய் சொல்லும் காலம் எது தெரியுமா?

1. ஓர் கல்யாணத்திற்காக 2. பெண்ணிடம் சேரும் போது
3. ஒருவனின் உயிருக்கு ஆபத்து ஏற்படும் போது
4. ஸகல சொத்துக்களும் போய்விடும் போது
5. உயர்ந்த அந்தணனுக்கு உதவி செய்ய நினைக்கும் போது

## பஞ்ச பூதங்களும் அதன் குணங்களும்

| | ஸம்ஸ்க்ருதம் | தமிழ | குணம் |
|---|---|---|---|
| 1. | விசும்பு | ஆகாயம் | ஸப்தம் |
| 2, | எரி | அக்னி | கொளுத்துவது |
| 3. | ஜலம் | தணணீர் | குளிர்ச்சி |
| 4. | வாயு | காற்று | மிடுக்கு |
| 5. | நிலம் | பூமி | பொறுமை |

## கோயில்கள் நான்கு வகை

1. ஸ்வயம் வ்யக்த ஸ்தலம்— தானாக ஏற்படுதல்
2. தைவிகம் — தேவதைகளால் கட்டப்பட்டது
3. ஸைத்தம் — சித்தாகளால் நிர்மாணிக்கப்பட்டது.
4. மானுஷம் — மனிதாகளால் கட்டப்பட்டது.

## ஸ்ரீரங்கம் கோயில் பிராகாரங்கள் ஏழு

1. தர்மவர்மா திருச்சுற்று – மூலஸதானம்
2. ராஜமஹேந்திரன் திருச்சுற்று
3. குலசேகரன் திருச்சுற்று
4. திருமங்கை மன்னன் திருச்சுற்று
5. அகலிங்கன் திருச்சுற்று.
6. திருவிக்கிரமன் திருச்சுற்று — உள்துறை வீதி
7. மாடமாளிகை சூழ் திருச்சுற்று — சித்திரை வீதி (அடையவளந்தான்) இவையே ஸப்த பிராகாரங்கள் என்று சொல்லுவர்.

— திரு- அடியார்க்கடியவன், கேத்தாண்டபட்டி

# குறை தீர்க்கும் கோவிந்தன்



प्रज्ञा लक्ष्मीः यशः सम्पत् ज्ञानं धर्मो विरक्तता।
मनः शुद्धिर्भवेन्नृणां स्वामितीर्थनिषेवणात् ॥

"ஸ்வாமி தீர்த்தத்தில் நீராடி ஸ்ரீநிவாசனை வழிபடுவோன் அறிவு, இலக்ஷ்மி கடாக்ஷம், புகழ், செல்வம் ஞானம், தர்மம், பற்றற்றத்தன்மை, மனத்தூய்மை முதலியவற்றைப் பெறுகிறான்."

தவச் செல்வர்களான சௌனகாதி முனிவர்கள் நைமிசாரண்ய க்ஷேத்திரத்தில் உலக நன்மையின் பொருட்டு ஸத்ர யாகம் எனும் பெரும் வேள்வி நடத்துவதற்காகக் கூடியிருந்தனர். முனிவர்களின் தவப் பயனோ அல்லது நாம் பெற்ற பேறோ திடீரென்று அங்கு ரோமஹர்ஷனர் என்று அழைக்கப்படும் ஸ்ரீ ஸூத முனிவர் வந்தார். தாயைக் கண்ட குழந்தைகள் போல அம்முனிவர்கள் யாவரும் ஸ்ரீ ஸூதரைக் கண்டதும் மகிழ்ச்சி யடைந்தனர். அவரை முறைப்படி உபசரித்தனர்.

அந்தி மயங்கும் ஸந்தியா நேரத்தில் எல்லோரும் அவரவர் கர்மானுஷ்டானங்களை முடித்துவிட்டு ஸ்ரீஸூத முனிவரை உயர்ந்த பீடத்தில் அமர்த்திப் போற்றினர்.

रोमहर्षण सयज्ञ पुराणार्थविशारद ।
माहात्म्यं श्रोतुमिच्छामो गिरीन्द्राणां महीतले ॥

"கற்றவரும் மற்றவரும் மகிழும் படி பரமன் புகழ் கூறி பாவம் போக்கும் பரம ரிஷியே! நாம் கூடியிருக்கும் நைமிசாரண்யம் புனித திருத்தலம். இது போன்றோ அல்லது இதனைக் காட்டிலும் பெருமை பொருந்தியதாகவோ வேறு திருத்தலம் இப்புவியில் உள்ளதா?" என வினவினர்.

உடன் பாகவதோத்தமரும் பரம காருணிகருமான ஸூத முனிவர் பரவசத்துடன் மறுமொழி பகர்ந்தார்.

"தவத்தையே தொழிலாயும், எந்நாளும் எம்பெருமான் திருவடிக்கே அடிமை யென்று மாதவன் மலர் கழல்களையே கதியாயும் கொண்ட யோகிகளே! புண்ணிய பூமியாகிய நமது பாரத பூமியே புவியிலேயே பாவனமான பூமி. இதில் பரம பாவன க்ஷேத்திரமாக இருப்பது சேஷாசலம் என்று அழைக்கப்படும், செம்பெருந்தடங்கண்ணன், திரள் தோளன், தேவகி சிறுவன், தேவர்கள் சிங்கம், நம் பரமன் கோவிந்தன் உறையும் ஸ்ரீ வேங்கடாசல க்ஷேத்திரமே. இதுவே கிருத யுகத்தில் அஞ்சனாத்ரி என்றும், திரேதாயுகத்தில் நாராயண கிரி என்றும், துவாபர யுகத்தில் சிம்ஹாசலம் என்றும் வழங்கப்பட்டது. கலியுகத்தில் ஸ்ரீ

திரு. ந. இராமன்-கும்பகோணம்.

வேங்கடாசலம் என அழைக்கப்படுகிறது. வேண்டியன அருளும் ப்ரத்யக்ஷ தயா க்ஷேத்ரம். இதன் பெருமை சொல்லற்கரியது"

कृतेऽञ्जनाद्रि त्रेतायां नारायणगिरिं तथा ।
द्वापरे सिंहशैलञ्च कलौ श्रीवेङ्कटाचलम् ॥

இதனைக் கேட்டு மகிழ்ந்த முனிவர்கள், 'ஐயனே! புனித தீர்த்தத்தில்

## புதிய சேவை

திருமலை திருப்பதி தேவஸ்தான மேலாண்மையின் கீழ் செயற்படும் கீழ்வரும் கோயில்களில் நபா ஒருவர் ரூ. 5/- செலுத்தி வாராந்திர அபிஷேக சேவைகளைக் கண்டு களிக்கலாம்.

1) ஸ்ரீ வேதநாராயணசுவாமி கோயில், நாகலாபுரம்.
2) ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வரசுவாமி கோயில், நாராயணவனம்
3) ஸ்ரீ வேணுகோபாலசுவாமி கோயில், கார்வேட்டுநகரம்.
4) ஸ்ரீ பிரசன்ன வேங்கடேஸ்வரசுவாமி கோயில், அப்பளாயகுண்ட்டா.
5) ஸ்ரீ வேங்கடேஸ்வரசுவாமி கோயில், ஸ்ரீநிவாசமங்காபுரம்.
6) ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மற்றும் ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர சுவாமி கோயில்கள், ரிஷிகேஷ்.

நீராடி பாவங்களை நீக்கிக் கொண்ட பின்னர்தானே பரமனை சேவிக்கச் செல்ல வேண்டும். அவனும் அருள் புரிவான். எனவே அத்தகைய பரம மங்களமான தீர்த்தம் எது என்பதை முதலில் எங்களுக்குக் கூற வேண்டும்' என்றனர்.

முனிவர்களின் ஆர்வத்தைக் கண்டு மெச்சிய முனிவர் மேலும் கூறினார்.

" தவச் சீலர்களே! ஸ்ரீ வேங்கடாசலத்தில், ஸ்ரீநிவாசன் உறையும் ஆலயத்தின் வட புறத்தில், ஸ்ரீ வராக மூர்த்தியின் சன்னிதியில் அமைந்திருக்கும் ஸ்ரீ ஸ்வாமி புஷ்கரிணி தீர்த்தமே பரம பாவன தீர்த்தம். இதற்கு ஈடான புண்ணிய வாவி எங்குமேயில்லை. மூன்று உலகங்களிலுமுள்ள புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவதால் பெறும் புண்ணியததை அல்லது பாவ நீக்கத்தை ஒருவன் ஸ்வாமி தீர்த்தத்தில் நீராடுவதால் பெற்று விடலாம் அறுபத்தாறு கோடி புண்ணிய தீர்த்தங்களும் இப்புண்ணிய வாவியில் சங்கமமாகியிருக்கின்றன. இது ஒரு வரப் பிரசாதமான தீர்த்தம். யார் யார் எதை எதை எவ்வாறு பிரார்த்திக்கிறார்களோ அவர்களுக்கு அவ்வாறே அருள்புரியும் ஆற்றல் மிக்கது இத்தீர்த்தம். இது அறம் முதலான நான்கு பேறுகளையும் அளிக்கும் வல்லமை உடையது. அக இருளும் புற இருளும் நீக்கி பெரு வாழ்வளிக்கும்."

**धर्मार्थकाममोक्षाणां यं यमिच्छन्ति पूरुषः ।**
**तं तं सद्यः समाप्नोति स्वामितीर्थ निमज्जनात्॥**

"தபோ நிதியே! எவரேனும் இத்தீர்த்தத்தில் நீராடி பாவம் நீங்கி மன மாசு நீக்கியிருக்கின்றனரா? இறையருள் பெற்றிருக்கின்றனரா? நாங்கள் அறிய விரும்புகிறோம்" என முனிவர்கள் ஆவலுடன் கேட்டனர்.

" இப்புனித வாவியில் நீராடி பரமனை தரிசித்து பாவச் சுமை நீத்தவர்கள் பலர். காசியபன் என்ற அந்தணன் பொருள்மீது கொண்ட பேராசையால் செய்த தவறின் பயனை இதில் நீராடி எவ்வாறு நீக்கிக் கொண்டான் என்பதைக் கூறுகிறேன், கேளுங்கள். காசியபனைப் பற்றிய இந்த இதிகாசம் கேட்பவர்கள், படிப்பவர்கள் எல்லோருடைய பாவங்களையும் நீக்கும். எனவே ஸ்ரீ ஸ்வாமி புஷ்கரிணியின் பெருமை கூறும் இவ்விதிகாசத்தைக் கவனமாகக் கேளுங்கள்", என்றுகூறி ஸ்ரீ ஸூத முனிவர் சொல்லத் துவங்கினார்.

**श्रीस्वामिपुष्करिण्याश्च माहात्म्यप्रतिपादकम् ।**
**इतिहासं प्रवक्ष्यामि पठताम्पापनाशनम् ॥**

'மகாபாரத யுத்தத்திற்குப் பிறகு யுதிஷ்டிரர் சில காலமே நாடாண்டார். அர்ஜுனனின் பேரனும், அபிமன்யுவின் மகனுமான பரீக்ஷித்திடம் அரசை ஒப்படைத்துவிட்டு, தம் நான்கு தம்பிகளுடனும் திரௌபதியுடனும் வனம் சென்றார். சில காலம் கழித்து இவர்களை அனைவரும் விண்ணுலகு அடைந்தனர்.

பரீக்ஷித் ஹஸ்தினாபுரத்தைத் தலைநகராகக் கொண்டு நீதி நெறி பிறழாமல் ஆண்டு வந்தான். இவனுக்கு ஜனமேஜயன் என்ற மகன் பிறந்தான். பரீக்ஷித்திற்கு அறுபது வயதாயிற்று. இவன் ஒரு சமயம் காட்டிறகு வேட்டையாடச் சென்றபோது ஒரு மானைத் துரத்திச் சென்றான். தனது முகாமிலிருந்து வெகு தூரம் விலகி வந்துவிட்டான். நெடுநேரமாகி விடவே பசியும் தாகமும் இவனை வாட்டத் துவங்கியது. இவனை அலைக்கழித்த மான் ஒரு முனிவரின் ஆசிரமத்தருகே சென்று புதர்களுக்கிடையே மறைந்துவிட்டது.

மானைத் துரத்திச் சென்ற மன்னவன் முனிவரின் ஆசிரமத்தைக் கண்டு உள்ளே சென்றான். அங்கு சமீகர் என்ற முனிவர் புலன்களையெல்லாம் அடக்கியவராக, ஓர்த்த மனத்தராய், உளனாய நான்மறையின் உட்பொருளை தன்னுள் காணும் யோக சமாதியில் ஆழ்ந்திருந்தார். அவர் தியானத்தில் இருப்பதாகக் கருதி மன்னன் மானைப்பற்றிக் கேட்டான். தன்னை மறந்திருந்த முனிவரின் செவிகளில் மன்னனின கேள்விகள் விழவேயிலலை.

பலமுறை கேட்டும் முனிவர் பதிலளிக்காதது கண்டு மன்னன் வெகுண்டான். பசியினாலும் தாகத்தினாலும் களைப்படைந்திருந்த இவன் தன்னை மறந்தான்; தன்னிலை இழந்

நான். சுற்றும் புறமும் பார்த்தான்; தூரத்தில் பாம்பு ஒன்று இறந்து கிடந்ததைக் கண்டான். 'செத்தாரைப் போல் வேடம் போடும் கபட யோகியே! இந்தா, இந்த செத்த உடலையே மாலையாக ஏற்றுக் கொள்' எனக்கூறி பாம்பின் உயிரற்ற உடலை அவர் கழுத்தில் மாலையாக அணிவித்து விட்டுக் கோபத்துடன் திரும்பிச் சென்று விட்டான். மிகுந்த உள்ளக் கலக்கத்துடன் தன் இருப்பிடம் அடைந்தான்.

निधाय मृतसर्पं तु कुपितः स्वपुरं ययौ ॥

மானம் குலம் கல்வி வண்மை அறிவுடைமை
தானம் தவம் முயற்சி தாளாண்மை-தேனின
கசிவந்த சொல்லியற் மேற காமுறுதல் பத்தும்
பசி வந்திடப்போம் பறந்து.

என்ற மூதுரைக்கேற்பவன்றோ அமைந்து விட்டது இவன் செய்கை! நல்லவர் நாணும் செய்கையன்றோ இது. முன்வினைப் பயனோ இவன் இச்செயல் செய்யத் துணிந்தது! ஊழிற் பெருவலி யாவுள!

சமாதியில் ஆழ்ந்திருந்த சமீகருக்கு சிருங்கி என்றொரு மகன் உண்டு. இவன் நண்பன் ஒருவன மன்னவன் வந்து சென்று சற்று நேரம் கழித்து ஆசிரமத்திற்கு வந்தான. தன நண்பனின் தந்தையின் கழுத்தில் மாலையாகக் கிடந்த ஸர்ப்பத்தைக் கண்டு பயந்தவனாக அலறிக் கொண்டே ஓடி, சிருங்கியிடம் சென்று கூறினான்.

நண்பன் சொற் கேட்ட சிருங்கி உடனே சினங்கொண்டான். சிறியவன்தானே, சித்தியெல்லாம் பெற்றாலும் சினமிறக்கக் கற்றான் இல்லை.

"என் தந்தையின் கழுத்தில் பாம்பின் உடலை மாலையாகப் போட்ட தீய செய்கையைச் செய்தவன் எவனாயினும், தக்ஷகன் என்ற பாம்பினால் ஏழு தினங்களுக்குள் கடிக்கப்பட்டு மரணமடைவானாக" என்று சாபமிட்டான்.

मत्ताते शवसर्पं यन्यस्तवान्मूढचेतनः ।
स सप्तरात्रान्म्रियतां सन्दष्टस्तक्षकाहिना ॥

ஓடோடிச் சென்றான். தந்தையைப் பணிந்தான். சினமும் பயமும் கலந்த நிலையில் அழுது கொண்டே தந்தையை எழுப்பினான். மகனின் ஸ்பர்சத்தால் சமாதி கலைந்த முனிவர் தன் கழுத்திலிருந்த ஸர்ப்பத்தை உணர்ந்தார், கழற்றி எறிந்தார். நடந்தவை முற்றும் மகன் கூறக் கேட்டார். அவனைத் தேற்றினார். சினத்தால் மைந்தன் இட்ட சாபம் குறித்து உளம் நொந்தார். ஞான திருஷ்டியால் இச்செயல் செய்தது மன்னன் பரீக்ஷித் என்றறிந்தார். 'தன்னுயிர் போல் மன்னுயிர் காக்கும் மன்னவனுக்கு இச்சாபமா? மன்னன் வீழ்ந்தால் நாடு வாழுமா? சினத்திற்கு அடிமையாகி இப்படி ஒரு அடாத செயல் செய்து விட்டாயே', என்று உள்ளம நொந்தார்.

'குரோதத்தினால் ஒருவன் தீமையே பெறுவான். தயை ஒன்றினால்தான் சுகத்தைப் பெற முடியும். சினத்தை வென்றவனே பொறுமையால் உலகை வெல்கிறான்' என்றார்.

क्रोधेन पातकं भूयात् दयया प्राप्यते सुखम् ।
यः समुत्पादितं कोपं क्षमयैव निरस्यति ॥

மகன் செய்த தவறு குறித்து வருந்திய முனிவர் உடனே கௌரமுகன் என்ற தன் சீடனை அழைத்தார்.

'ஏ கௌரமுக! உடனே நாடு சென்று பரீக்ஷித்திடம் இங்கு நடந்தவை யாவற்றையும் கூறி வா. உத்தரையின் மகன் சாபக்கிரஸ்தனாக ஆகிவிட்டான் என்பதையும் தெளிவு படுத்தி விடு. சிறியவன் செய்த சிறு


காஞ்சிபுரம் காமாட்சி அம்மன் திருக்கோவில்

பிழையின் விளைவு என்பதையும் சொல்லி விடு', என்று கூறினார்.

भो गौरमुख! गत्वा त्वं वद भूपं परीक्षितम् ।
इमं शापं मत्सुतोक्तं तक्षकाधिपदंशनम् ॥

கௌரமுகன் மூலம் முனிவர் மகன் சாபமறிந்த மன்னன செய்வதறியாது திகைத்தான். வலியச சென்று பாம்பின் வாய்ச் சிக்கிய தேரையின் வாழ்வு போல ஆகிவிட்டதே தன் வாழ்வும் என வருந்தி நின்றான். மந்திரிகளைக் கூட்டி ஆலோசித்தான்.

கங்கையின் மையத்தில் ஒரு மண்டபம் அமைக்கப்பட்டது. கருட மந்திரத்தில் சித்தி பெற்று எவ்விஷத்தையும் நீக்க வல்லவர்கள், மருத்துவக் கலைஞர்கள் மற்ற பல முனிவர்கள் யாவரும் மன்னனைச் சுற்றி அமர பரீக்ஷித் அம்மண்டபத்திற்குக் குடி பெயர்ந்தான். தக்ஷகன் வராமலிருக்க எல்லாவித பாதுகாப்பு ஏற்பாடுகளும் செய்யப்பட்டன.

இச்சமயத்தில் இவன் நல்வினைப் பயனெல்லாம் உருவெடுத்ததாக பிரம்ம நிஷ்டரான சுகர் அங்கு வந்து சேர்ந்தார். பரமனின் லீலைகளை பலவாறாக எடுத்துரைத்தார். கூடியிருந்த அனைவரும் பரமனின் பக்தியில் தம்மை மறந்து அமர்ந்திருந்தனர்

அந்நாட்டில் காச்யபன் என்றொரு அந்தணன வாழ்ந்து வந்தான். மநதிர சாஸ்திரங்களில் கரை கண்டவன். எத்தகைய கடும் விஷத்தையும் நீக்கும் ஆற்றல் பெற்றவன். மந்திர ராஜன் என்று பட்டம் பெற்றவன். இவன வறுமையில் வாடினான். மனனனின சாபம் பற்றி கேள்விப்பட்டான். 'தக்ஷகன் என்ன, அவன் ரக்ஷகனே வந்தாலும் தன் மந்திர சக்தியால மன்னனைக் காப்பாற்றி விடலாம் என்று நினைத்தான். மன்னனிடமிருநது அதிகமான அளவில் செல்வத்தைப பெறலாம். சுகமாக வாழலாம்' என்று எண்ணி மன்னனைக் காணக் கிளம்பினான்.

சாபத்தின் கெடு முடிவடைகின்ற ஏழாம் நாள் காலை காச்யபன் மன்னன் மண்டபம் அமைத்துத் தங்கியிருக்கும் நகரினுள் நுழைந்து கொண்டிருந்தான். தான் பெறப் போகும் பரிசில்களையும் செல்வங்களையும் பற்றிய கற்பனையில் மனதைப் பறிகொடுத்தவனாக மிக வேகமாக நடந்து வந்து கொண்டிருந்தான.

அவ்வமயம் தக்ஷகன் ஒரு பிராமணனின் உருவில் அவன் முனபு தோன்றினான்.

सप्तमेऽहनि विप्रेन्द्रो दरिद्रो धनकामुकः ।
अत्रान्तरे तक्षकोऽपि विप्ररूपी समाययौ ॥

"அந்தணரே! தவச்சிரேஷ்டர் போல் தோன்றுகிறீரே. வெகு வேகமாகச் சென்று கொண்டிருக்கிறீரே. தாங்கள் எங்குச் செல்கிறீர்கள் என்பதை நான் அறியலாமா," என பணிவன்புடன் கேட்டான்.

'மன்னவன் பரீக்ஷித் தக்ஷகனால் கடிபட்டால் அவ்விஷத்தினின்று அவனைக் காக்கவே செல்கிறேன். நீர் யார்?'

'அன்பனே! நல்ல காரியம் செய்தாய். நான்தான் தக்ஷகன். எனது விஷத்தை முறியடிக்கும் ஆற்றல் படைத்தது ஏதும் இவ்வுலகில் இல்லை. உன்னால் முடியாது. திரும்பிச் செல்'

'தக்ஷகனே என் வழியில் குறுக்கிடுகின்றாய் எனின், என் மந்திரத்தி வலிமை பற்றி சொல்லவும் வேண்டுமோ! என் மநதிர சக்தியின் முன் உன் ஆற்றல் நில்லாது போ', என்றான் காச்யபன்.

இதனைக கேட்ட தக்ஷகன் வெகுண்டு, அருகில் செழித்துப் படர்நது வளர்ந்திருந்த ஒரு பெரிய மரத்தைச் சுட்டிக் காட்டி, 'காச்யபனே! இதோ இந்த மரத்தை நான் கடிக்கிறேன். என் விஷத்தால் இம்மரம் அழியக் காண்பாய். எங்கே, உன் ஆற்றலைக் காணப் பார்ப்போம்'. என்றுகூறி அம்மரத்தைத் தீண்டினான்.

தக்ஷகன் தீண்டிய அக்கணமே அம்மரம் விஷத்தீயால் எரிந்து சாம்பலாகி சரிந்து விட்டது.

உடனே காச்யபன், 'இதோ பார், என் மந்திரத்தின் ஆற்றலை' எனக் கூறி, தன் ஜபத்தின் சக்தியால் அதற்கு உயிரூட்டினான. அடுத்த நொடி அங்கு முன் போலவே கிளையில் அமர்ந்திருந்த ஒரு மனிதனோடு கூட உயிர் பெற்றதாய் மிகவும் செழித்து வளர்ந்ததாக அம்மரம் எழுந்து நின்றது. 'ஸ நரஸ்தேன வ்ருக்ஷேண ஸாக முஞ்சீவிதோ அப்வத்'.

இதனைக் கண்டு வியந்த தக்ஷகன் காச்யபனை நோக்கி, 'அந்தணரே! உமக்குப் பொருள்தானே வேண்டும். மன்னவன் எவ்வளவு கொடுப்பானோ அதைப் போல இரு மடங்கு பொன்னும் பொருளும் தருகிறேன். மன்னனின ஆயுள் முடியப் போகிறது. வந்த வழியே திரும்பிச் செல்லும். சுகமாக வசியும்', என்றான்.

यत्ते राजा धनं दद्यात्ततोऽपिद्विगुणं धनम् ।
ददाम्यहं निवर्तस्व शीघ्रमेव द्विजोत्तम ॥

பேராசை கொண்ட காச்யபன மன்னனுக்கு ஆயுள் முடிந்துவிட்டது போலும் எனக் கருதியவனாக, தக்ஷகன் கொடுத்த ரத்தினங்களுடன் தன் இல்லம் திரும்பினான்.

தக்ஷகன் முனிவர்கள் காணிக்கையாயளிக்கும் பழங்களுள் ஒரு பெரிய இலந்தைப் பழததினுள் புழு வடிவத்துடன் புகுந்து, மன்னவன பழத்தை எடுத்து வாயில் போட்டு மென்றபோதுவெளிவநது தொண்டையில் கடித்து மன்னனைக்கொன்றான்

(29-ம் பக்கம் பார்க்க

# இன்றைய திருவேங்கடம்

பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார்
சென்னை-40.



இன்று கற்றறிந்த புலவர்களும் பொதுமககளும் திருப்பதி மலையையே 'வடவேங்கடம்' என்று கருதுகின்றனர். தேசிய கவி பாரதியாரும் வடவேங்கடத்தை 'வடமாலவன் குன்றம்' என்றே வழங்குவர். இதனை,

"நீலத் திரைக்கடல் ஓரத்திலே-நின்று
நித்தம் தவஞ்செய் குமரிஎல்லை-வட
மாலவன் குன்றம் இவற்றிடை-யேபுகழ்
மண்டிக்கிடக்கும் தமிழ்நாடு"
[பா.க. செந்தமிழ்நாடு-5]

என்று தமிழ்நாட்டு எல்லையை வகுத்துக் காட்டும் பாடலில் கண்டு தெளியலாம். தொல்காப்பியப் பாயிரத்தில் கூறப்பெற்ற 'தமிழ்கூறு நல்லுலகமே' பாரதியின் கருத்தில் புதிய வடிவங்கொண்டு நிற்பதை எளிதில் கண்டு தெளியலாம். தொல்காப்பியப் பாயிரமேயன்றி சங்க இலக்கியங்களில் வேங்கடத்தைப் பற்றிய குறிப்புகள் ஏராளமாக உள்ளன எனறு ஸப்தகிரியில் காட்டடப்பட்டது. (சங்ககால (வட)வேங்கடம்-2 காண்க) இந்தக் குறிப்புகளைத் தெளிந்து சங்கப்பாடல்களில் வேங்கடம் பற்றிய வருணனைகளைக் கொண்டு சீர் தூக்கி ஆராயும் போது திருப்பதி மலையைத் தொல்காப்பியர் கூறும் 'வடவேங்கடம்' என்று அறுதியிட்டு உரைப்பது தவறு என்பதும் தெளிவாக்கப்பெற்றது. சங்க இலக்கியங்கள் குறிப்பிடும் 'வடவேங்கடம்' இன்னதுதான் என்று இனமும் காட்டப்பெற்றது.

**'திருப்பதி'யின் இருப்பும் சூழலும் :**

முதலில் 'திருப்பதி' என்ற நகரத்தின் இருப்பையும் அதன் இயற்கைச் சூழ்நிலையையும் காண்போம். கோவிந்தராசர் இங்குத்திருக்கோயில் கொண்டிருப்பதால், இந்நகரத்தைப் பக்தர்கள் 'கோவிந்தராசாப் பட்டணம்' என்றே வழங்குகின்றனர். இந்த நகரத்தை ஒட்டியுள்ள மலையையும் மக்கள் திருப்பதி என்றே வழங்குகின்றனர். விவரம் அறிந்தோர், அதனைத் 'திருமலை' என்று கூறுவர். (மலையைத் 'திருமலை' என்றும் நகரைத் 'திருப்பதி' என்று வழங்குவதே சரியாகும்) இந்த மலை தமிழ் கூறும் நல்லுலகத்தின் வடகிழக்குமூலையிலுள்ள ஒழுங்கற்ற தாழ்வான சில குன்றுகளின் கூட்டமாகும். இம்மலை 14 டிகிரி வடகுறுக்கையுள்ளும் ( North latitude ) 80 டிகிரி கீழ் நெடுக்குக் கோட்டிலும் (Longitude) அடங்கி சென்னைக்கு வடமேற்குத் திசையில் சுமார் 85 கல் தொலைவில் அமைந்துள்ளது. இம்மலை 'ஏழுமலை' என்றே வழிவழியாக வழங்கப்பெற்று வருகின்றது. பேருந்தில் மலைக்குச் சென்று திரும்பும் சாலையில் முதலில் நாம் காண்பது - கீழிருந்து மேல்- விருஷபாத்திரி (எருத்து மலை): அடுத்து முறையே நீலாத்திரி (நீல மலை), அஞ்சனாத்திரி (மைவரை) சேஷாத்திரி (சேடமலை, சேடம்—பாம்பு), கருடாத்திரி (கருடமலை) நாராயணாத்திரி (நாராயண மலை)

வேங்கடாத்திரி (வேங்கட மலை) என்ற பெயர்ப் பலகைகளைக் கண்டு ஏழுமலையையும் இனங்கண்டு கொள்கின்றோம். 'அத்திரி' என்ற வடமொழிச் சொல் மலையைக் குறிப்பது. இந்த மலைக்குன்றுகள் நேராக ஓர் ஒழுங்கில் அமையவும் இல்லை; ஒன்றையொன்று தொடர்ந்த நிலையில் ஒரு சங்கிலி போலவும் அமையவில்லை. அவை ஒன்றையொன்று தழுவிய நிலையில் ஒன்று சேர்ந்த கூட்டம் போல், ஒரு குழப்பமான சுருள் போல் அமைந்துகிடக்கின்றன. பேருந்தில் மலை மேல் ஏறுபவர்கள் இருபக்கமும் நோக்கி இந்நிலையைக் கண்டு தெளியலாம்.

இக்குன்றுகள் கடல்மட்டத்திற்கு மேல் 1000 அடி முதல் 2500 அடி வரை உயரமுள்ளனவாக அமைந்துள்ளன. மலையெங்கும் புல் பூண்டுகள் காணப்பெறுகின்றன. இங்கும் அங்குமாகச் சிறு சிறு மரங்கள் தென்படுகின்றனவேயன்றி பெரிய மரங்களைக் கொண்ட அடர்ந்த காடுகள் இல்லை. மலையின் உயரங் காரணமாக தட்ப வெப்ப நிலையில் சிறிது மாற்றம் காணப்படுகின்றதேயன்றி பெரும்பாலும் அந்நிலை மலையைச் சூழ்ந்துள்ள சமவெளியின் தட்பவெட்ப நிலையையே ஒத்துள்ளது என்று கூறலாம். இன்று வன பாதுகாப்புத் துறையினர் பல இடங்களில் யூகலிப்டஸ் உள்ளிட்ட பல மரங்களை வளர்த்து வருகின்றனர். தேவையான மழையின்மை காரணமாக அவை நீலகிரியிலுள்ளவை போன்று செழித்து உயர்ந்து வளரவில்லை. சுமார் ஐம்பது ஆண்டுகட்கு முன்பு ஆண்டின் சில திங்களில் மலையின் மீது மலேரியா நோய் தலைகாட்டிக் கொண்டிருந்ததாகக் கருதப்பெற்றது. ஆயினும் திருமலை—திருப்பதி தேவஸ்தானத்தார் மேற்கொண்ட அரிய முயற்சியினால் மலேரியா நோய் நிலைகள் முற்றிலும் இல்லாதொழிந்தன. இன்று நாட்டின் நாலாபுறங்களினின்றும் வரும் அடியார்கட்காக தங்கும் வசதிகளும் நீர் வசதிகளும் இயன்ற வரை நல்ல முறையில் செய்யப்பெற்று வருகின்றன. ஆண்டு தோறும் திருத்தலப் பயணிகளின் கூட்டம் பெருகிக் கொண்டே வருகின்றது. இறைவனின் கருவூலமும் பொங்கி வழிந்து கொண்டேயுள்ளது.

**'வேங்கடம்'—சொற்பொருள் மாற்றம் :**

முன் கட்டுரையொன்றில் 'வேங்கடம்' என்ற சொல்லின் பொருள் குறிப்பிடப் பெற்றது. அதனை நினைவு கூர்ந்து ஈண்டு பொருத்த முடைத்து. பக்தியியக்கம் செல்வாக்குப் பெற்ற இடைக்காலத்தில் 'வேங்கடம்' என்ற சொல்லும் புதுப் பொருளைப் பெற்றுவிட்டது. ஈண்டு திருவாய்மொழியிலுள்ள ஒரு பாசுரத்தை ஆய்வது பொருத்தமாகின்றது.

வேங்க டங்கள்மெய் மேல்வினை முற்றவும்
தாங்கள் தங்கட்கு நல்லன வேசெய்வார்
வேங்க டத்துறை வார்க்கு 'நம'தெனல்
ஆங்க டமைஅ துசுமந் தார்கட்கே"
—திருவாய் 3:3:6

வேம்-வெந்துபோம்; கடங்கள்-பாவங்கள்; மேல்வினை-இனி விளையக் கூடிய பாவங்கள்: (ஆகாமியம்) முற்றவும்-சகல பாவங்களும்; நல்லன-கைங்கர்யங்கள்; நம-நம:(வட சொல்) சுமந்தார்க்கு-வசிக்கிறவர்கட்கு]

ஆழ்வார்கள் காலம் வரை 'வேம்-வெந்துபோம், கடங்கள் - பாவங்கள்' என்று வழங்கின. தன்னை அடைந்தவர்களுடைய பாவம் அனைத்தையும் ஒழிப்பதனால் இத்திவ்விய தேசத்தை 'வேங்கடம்' எனக் கூறத் தொடங்கினர். அவர்கள் காலத்திற்குப் பிறகு 'வேம்' என்ற சொல் 'எரித்தல்' என்ற பொருளைக் கொண்டிருந்த மரபு மறைந்து 'வேம்' என்ற சொல் 'பாவம்' என்ற பொருளை ஏற்றது. பக்தியியக்கம் ஓங்கியிருந்த காலத்தில் சமயக் கருத்துக்களும் தத்துவக் கருத்துக்களும் மக்கள் மனத்தில் நுழையத்தொடங்கி அதனால் அவர்கள் மனநிலை விரிந்த காலத்தில், மனித மனம் ஏற்கனவே தான் படைத்த சொல்லுக்குப் புதுப் பொருளையும் சேர்க்கத் தொடங்கியது. 'பாவமும்' ஆன்மாவுக்குத் தாங்க முடியாத வெப்பத்தைத் தருவதாகும் என்று மனம் கற்பிக்கத் தொடங்கியது. எனவே, 'வேம்' என்ற சொல் 'பாவம்' என்ற பொருளையும் ஏற்க வேண்டியதாயிற்று. அங்ஙனமே, 'கடம்' என்ற சொல்லும் புதுப்பொருளை ஏற்றது. 'கடம்' என்ற சொல் சங்க காலத்தில் பாலை நிலத்தைக் குறிக்கும் சொல்லாக வழங்கியமை முன்னர்க் குறிப்பிடப் பெற்றது. (சங்ககால வேங்கடம்-1 காண்க) உரையாசிரியர்கள் அதற்கு 'அருஞ்சுரம்' என்று பொருள் வழங்கியதும் சுட்டிக் காட்டப்பெற்றது. இடைக்காலத்தில் 'கடம்' என்ற சொல் 'எரித்தல்' என்ற பொருளை ஏற்றது. 'வேங்கடம்' என்ற கூட்டுச்சொல் 'பாவங்களை எரித்தல்' என்ற பொருளில் வழங்கி மேலும் அது 'பாவங்களை எரிக்கும் இடம்' என்றும் வழங்கத் தொடங்கியது. சங்க காலத்தில் இயற்பெயராக வழங்கிய 'வேங்கடம்' இடைக்காலத்தில் காரணப் பெயராக மாறத் தொடங்கியது; ஆழ்வார் பாசுரத்திலும் இப்பெயராகவே ஏறிவிட்டது. நம் போன்று கற்றறிந்தவர்கள் இச்சொல்லாராய்ச்சியில் ஈடுபட்டுத் தலையை உடைத்துக் கொள்ளுகின்றோம். ஆனால் நாடோறும் பல்லாயிரக் கணக்கில் திருத்தலப்பயணமாக வரும் பக்தர்கள் - கற்றவர்கள் கல்லாதவர்கள் உட்பட அனைத்தையும் மறந்து 'வேங்கடத்தைத் தமது பாவங்களையெல்லாம் தீயினில் தூசாக எரிக்கும்' இடமாகவே கருதுகின்றனர். இன்னும் சிலர் 'வேங்கடம்' என்ற திவ்விய தேசம் அழிவில்லாத ஐசுவரியங்களை அளிக்கும் இட—

மாகவும் எனவும் கருதுகின்றனர். (வராக புரான விளக்கம் ஆகும்) வேண்டுவார்க்கு வேண்டுபவற்றைத் தரும் 'கலியுக வரதன்' எழுந்தருளி யிருக்கும் இடமாகக் கருதும் மனங் கட்குச் சொற்களுக்குப் புதிய பொரு ளைச் சேர்த்துக் கொள்வதில் ஒரு சிரமும் இருக்க முடியாதல்லவா? எனவே இவர்கள் கருத்திற்கு ஏற்ப 'வேம்' என்பது 'அழிவின்மை' 'கடம்' என்பது 'ஐசுவரியம்' என்ற பொருள் வழங்கத் தொடங்கியது. தன்னை அடைந்தார்க்கு அழிவில்லாத ஐசு வரியங்களைத் தருதலால் இந்தத் திவ்விய தேசம் 'வேங்கடம்' என்று பெயர் பெற்றதாக இவர்கள் மனம் எண்ணுவதில் வியப்பொன்றும் இல்லை. இத்தகைய பக்தர்கள் சைவர்கள், வைணவர்கள் உட்பட எல்லோரும் மனத்திற்குகந்த 'பக்தி அவியல்' பாடலும் எழுந்தது.

> திருப்பதி மிதியாப் பாதம்
> சிவனடி வணங்காச் சென்னி
> இரப்பவர்க் கியாக் கைகள்
> இனியசொற் கேளாக் காது
> புரப்பவர் தங்கள் கண்ணீர்
> பொழிதரச் சாகாத் தேகம்
> இருப்பினும் பயனென்? காட்டில்
> எரிப்பினும் இல்லை தானே
> (விவேகசிந்தாமணி-28)

என்ற பாடல் எத்தனை மனங்கட்கு ஆறுதல் அளிக்கின்றது என்பதை நம்மால் அளவிட்டு உரைத்தல் இய லாததன்றோ?

'வேங்கடம்' என்ற சொல்லின் பொருள் இடைக்காலத்தில் அதிசயிக் கத்தக்க முறையில் வளர்ந்ததற்குத் திருமூலரின் பாடல் ஒன்று சான்றாக விளங்குகின்றது.

> வேங்கட நாதனை வேதாந்தக் கூத்தனை
> வேங்கடத் துள்ளே விளையாடு நந்தியை
> வேங்கடம் என்றே விரகறி யாதவர்
> தாங்கவல் லாருயிர் தாமறி யாதே
> (திருமந்திரம்-232
> (உயிர் நிலையாமை)

இப்பாடலில் 'வேங்கடம்' என்ற சொல் உடலைக் குறிக்கின்றது. 'வேங்கடநாதன்' வேதும இயல் புள்ள உடலுக்கு நாதன் ஆகின்றான். 'நாதன்' என்டு ஆன்மாவைக் குறிக் கின்றது; அத்துடன் நில்லாமல் ஆன் மாவுக்கும் ஆன்மாவாக விளங்கும் - அந்தர்யாமியாக இருக்கும் —பரமான் மாவையும் குறிக்கின்றது. வைணவ தத்துவத்தில் சித்தும் (உயிரும்) அசித் தும் (உடல், உயிரற்ற பொருள்களை னைத்தும்) எம்பெருமானுக்கு உட லாக இருப்பதாகக் கூறப்படும்.

இப்போது எல்லோர் மனத்திலும் 'வேங்கடம்' என்னும் பெயர் ஒரு சொல்லாகவே தென்படுகின்றது. சொல்லிலக்கணத்தின் அடிப்படை யில் அமைந்த பெயரின் முக்கியத்துவ மும் நாளடைவில் மறைந்துவிட்டது. ஆயினும் ஒரு சொல் நீர்மைத்தாக வழங்கும் பெயரில் பழங்காலத்தின் பெருமையும் சிறப்பும் சேர்ந்தே மிளிர்கின்றது. அப்பெயரில் 'அச் சத்தை விளைவிக்கும் பழங்கூறு' அடி யோடு இல்லாதொழிந்தது. வடஎல் லையாக வழங்கும் 'வடவேங்கடம்' என்ற அடையுடன் கூடிய பெய ரும் வழக்கற்றுப்போய் வைணவ சம் பிரதாயத்தின் அடையாகிய 'திரு' என்பது சேர்ந்து 'திருவேங்கடம்' என்று வழங்கி வருகின்றது. 'திரு' என்பது என்னென்ன பொருள்களி லெல்லாம் வழங்கிவருகின்றதோ அப் பொருள்களெல்லாம் 'வேங்கடம்' என்ற பெயருடன் சேர்ந்து ஊருக்குப் பெருமையையும் சிறப்பினையும் அளித்துவிட்டது.மலையின் பெயரில் ஏற்பட்ட இம்மாற்றம் காலப்போக் கில் இம்மலைக்கு ஏற்பட்ட மாற் றத்துடன், எல்லாவகையிலும் பொருந்துவதாக அமைந்துவிட்டது.

**திருப்பதி புகழோங்கிய காலம் :**

வட எல்லையின் முக்கிய எல்லைக் (Land Mark) குறியாகத் திகழும் 'வடவேங்கடம்' (திருப்பதி) எக்காலத்தில் தமிழர்கள் யாவரும் சிறப்பாகக்கருதும் இடமாக அமைந்தது என்பதைச் சிந்திப்போம்' திருப்பதி மிகவும் புகழடைந்தது, சம யச் சார்பு பெற்றிய பிறகேயாகும். இடைக் காலத்தில்தான் இது திருத்தலப் பய ணிகளின் முக்கிய இடமாக அமைந் தது. சங்க காலத்தில் இச்சமயச் சார்பு இவ்விடத்திற்கு ஏற்பட வில்லை. இத்தகைய சார்பு ஏற்பட் டது பிற்காலத்தில்தான். ஆயினும் திருப்பதி பற்றிய சமயச் சார்பான குறிப்பு புறப்பொருள் வெண்பா மாலையிலும் சிலப்பதிகாரத்திலும் காணப்பெறுகின்றது. இவையே முதன் முதலாகக் கூறப்பெறும் மிகப் பழைய குறிப்புகளாகக் கருதலாம்.

முதலில் ஐயனாரிதனார் வாக்கி னைக் காண்போம்:

> "வெறிகொள் அறைய நுவி வேங்கடத் துச் செல்லின்
> நெறிகொள் ப்டிவத்தோய் நீயும் - பொறிகட்(கு)
> இருளீயும் ஞாலத்(து) இடரெல்லாம் நீங்க
> அருளீயும் ஆழி யவன்"
> —புறப்பொருள் வெண்பாமாலை- பாடாண் படலம் - புலவர் ஆற் றுப்படை (23) உதாரணச் செய்யுள்

[வெறி-வாசனை; அறை-ஒலிக்கும்; நெறி-முறைமை]

என்ற பாடலில் 'வேங்கடம்' குறிப் பிடப்பெற்றிருப்பதுடன் அங்கு எழுந் தருளியிருக்கும் இறைவன் திருவாழி யைத்தரித்துக்கொண்டிருக்கும் குறிப் பும் 'ஆழியவன்' என்ற சொல்லால் காட்டப்பெற்றிருத்தல் நோக்கத்தக் கது.

**சிலம்பின் குறிப்பு :**

சிலப்பதிகாரத்தில் வரும் 'வேங் கடம்' பற்றிய குறிப்பு இது: இந்தக் காவியத்தில் வரும் மாங்காட்டு மறை யோன் திருத்தலப் பயணம் செய்து வருகின்றான். உறையூரையடை த கோவலனும் கண்ணகியும் கவுந்தியடி களுடன் வைகறையாமத்து அவ்வூ



ரைக் கடந்து தென் திசையை நோக்கிச் செல்லுபவர்கள், கனன்று எழும் கதிரவன் வெப்பத்தைப் பொறுக்கலாற்றாது வழியில் ஒரு மருத நிலப் பரப்பில் வனப்புற்றுத் திகழாநின்ற ஓர் இளமரக்காவில் திருத்தலப்பயணிகள் தங்குவதற்கென்று அமைக்கப் பெற்றிருந்த இருப்பிடத்தில் இளைப்பாறுதற் பொருட்டுச் சென்று புகுகின்றனர். அப்பொழுது தென்றிசையினின்றும் வடதிசை நோக்கிச் செல்லும் மறையோனும் அவ்விடத்தில் வந்து புகுகின்றான்; வருகின்றவன், 'நீது தீர் சிறப்பின் தென்னனை' வாழ்த்திக் கொண்டே வருகின்றான். அங்ஙனம் வருகின்றவனைக் கோவலன்,

'யாது நும்மூர்? ஈங்கென் வரவு?' (சிலம்பு - காடுகாண் — அடி 32) என்று வினவுகின்றான். இந்த இரண்டு வினாக்களில் முன்னதினும் பின்னது சிறப்புடையதாகலின் அதற்கு விடைகூறும் இடத்தில் திருவரங்கம், திருவேங்கடம் இவற்றின் வருணனைகள் வருகின்றன. அவை

35 நீல மேக நெடும்பொற் குன்றத்துப்
பால்விரிந் தகலாது படிந்தது போல
ஆயிரம் விரித்தெழு தலையுடை
அருந்திறல்
பாயற் பள்ளிப் பலர்தொழு தேத்து
விரிதிரைக் காவிரி வியன் பெருந்
துருத்தித்

40 திருவமர் மார்பன கிடந்த
வண்ணமும்
வீங்குநீர் அருவி வேங்கடம்
என்னும்
ஓங்குயர் மலையத்து உச்சி மீமிசை
விரிகதிர் ஞாயிறும் திங்களும்விளங்கி
இருமருங் கோங்கிய இடைநிலைத்
தானத்து

45 மின்னுக் கோடியுடுத்து விளங்குவிற்
பூண்டு
நன்னிற மேகம் நின்றது போலப்
பகையணங் காழியும் பால்வெண்
சங்கமும்
தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி
நலங்கிளர் ஆரம் மார்பில் பூண்டு

50 பொலம்பூ ஆடையில் பொலிந்து
தோன்றிய
செங்கண் நெடியோன நின்ற
வண்ணமும்
என்கண் காட்டென்று என்னுளம்
கவற்ற
வந்தேன குடமலை
மாங்காட்டுள்ளேன்

*(சிலம்பு-காடுகாண்-அடி 35-53)*

[குன்றம்-மலை; பால் விரிந்து-பக்கங்களில் விரிந்து; விரிந்து-படம் விரிந்து; திறல்-ஆற்றல்; திரை-அலை! துருத்தி-ஆற்றிடைக் குறை (அரங்கம்); கிடந்த வண்ணம்-அறிதுயில்கொண்டு கிடக்கின்ற அழகு; வீங்கு நீர்-மிகவும் பெருகி வீழாநின்ற நீர்; மின்னுக் கொடி- மின்னலாகிய புத்தாடை; பகை அணங்கு-பகைவரை வருத்துகின்ற;-ஆழி-திருவாழி; பால் வெண் சங்கம்-பால் நிறத்தினையுடைய சங்கு; நலம்-அழகு; ஆரம்-கௌத்துவ மணிமாலை! பொலம் பூவடை-பொற்பூவாடை; நெடியோன்-திருநெடுமால்; நின்ற வண்ணம் - நின்ற திருக்கோலம்]

இவற்றைத் தவிர, இதே காவியத்தில் வேறு இரண்டு இடங்களில் வேங்கடதைப் பற்றிய குறிப்பு காணப் பெறுகின்றது.

" நெடியோன் குன்றமும
தொடியோள் பௌவமும்
தமிழ்வரம் புறுத்த
தண்புனல் நல்நாட்டு"
*(ஷெ வேனிற்காதை-அடி 1-2)*

என்றும்,

" வேங்கட மலையும் தாங்கா விளையுள்
காவிரி நாடும் "
*(ஷெ கடலாடுகாதை-அடி 30-31)*

என்றும் வருதலைக் காணலாம்.

உறையூர் காவிரியின் தென்பால் உள்ளது. திருபாணாழ்வார் திருவவதரித்த திவ்விய தேசமாகும் இது. உறையூருக்கு நேர்வடக்கில் காவிரி

நதியின் வடகரையில் திருவரங்கம் என்னும் திருப்பதி உள்ளது.

கொண்டல் வண்ணனைக்
கோவல னாய்வெண்ணெய்
உண்ட வாயன்என்
உள்ளம் கவர்ந்தானை
அண்டர் கோன் அணி
யரங்கன்என் அமுதினைக்
கண்ட கண்கள் மற(று)
ஒன்றினைக் காணாவே
(அமலனாதி-10)

என்று பாண்பெருமாள் அநுபவித்த பெரிய பெருமாள் எழுந்தருளியிருக்கும் திவ்விய தேசமாகும் இது. உள்ளத்தை உருக்கும் நிகழ்ச்சியொன்று இப்பொழுது நம்மனத்தில் எழுந்து நம்மைத் தன்னிலை கெட்டழியச் செய்கின்றது.

**கோதண்டபாணிப்பிள்ளையின் கருத்து :**

மேற்குறிப்பிட்ட வருணனையைக் குறித்து இராவ் சாகிப் கோதண்டபாணிப்பிள்ளையின் ஆய்வுக் குறிப்பு இது: "இந்தத் திருவரங்கத்திற்கு மிக அண்மையிலுள்ளதும், தான் தங்கியிருந்ததுமான உறையூரிலுள்ள மாங்காட்டு மறையோன் திருவரங்கத்தை விரித்துக் கூறுவது மிகவும் பொருத்தமேயாகும். இங்குத் திருவரங்கத்தைப் பற்றி அவன் கூறிய செய்தி ஆறுவரிகளில் மிகச் சுருக்கமாக உள்ளது. ஆனால், அவன் இன்னும் நேரில் கண்டறியாத வேங்கடத்தைப் பற்றிய குறிப்புகள் சற்று விரிவாகப் பதினொரு அடிகளில் கூறப்பெற்றுள்ளன. கோவலன் பூம்புகாரில் வாழ்ந்த பெருவணிகன். திருவேங்கடம மலைநாட்டை விடப் பூம்புகாருக்கு மிகவும் அண்மையிலுள்ளது. ஆதலின் அவன் வேங்கடத்தைப் பற்றி நன்கு அறிந்திருத்தலும் கூடும். மிகத் தொலைவில் மலை நாட்டிலுள்ள மாங்காட்டு மறையோன் அறிந்திருப்பதை விடக் கோவலன் திருவேங்கடத்தைப் பற்றி நன்கு அறிந்திருத்தல் கூடும் என்று கருதுவதில் தவறு ஒன்றும் இல்லை! இஃது அறிவுக்குப் பொருத்தமான ஊகமேயாகும். அதுவும் இன்று திருப்பதி புகழ் அடைந்திருப்பது போல் அன்றும் அனைவருக்கும் தெரிந்துள்ள ஊராக இருந்திருப்பின் கோவலன் இந்த ஊரைப் பற்றி நன்றாகவே அறிந்திருப்பான் என்றும், அதுவும் தமிழகத்தின் வடஎல்லையின் முக்கியமான ஓர் இடம் என்று அறியும் அளவுக்குத்தெரிந்திருப்பான் என்றும் கருதுவது இந்த ஊகத்தை மேலும் வலியுறச் செய்கின்றது. திருப்பதிக்கு நேரில்சென்று அதனைக் கண்டறியாத மாங்காட்டுமறையோன் அவ்வூரைப்பற்றி ஓரளவு நன்கு அறிந்திருக்கக் கூடிய கோவலனுக்கு மிக விரிவாக அத்திவ்விய தேசத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானின் திருமேனியை நேரில் கண்டது போல் விவரமாகக் கூறுவது பொருத்தமாகத் தோன்றவில்லை. இது கொல்லத் தெருவில் ஊசி விற்கும் கதை போன்றதாக நினைக்கவும் தூண்டுகின்றது" என்பது. ("வடவேங்கடம்" என்ற தலைப்பில் வந்துள்ள ஆங்கிலக் கட்டுரையில் (Tamil Culture - Vol. IX No. 1 Jan. - March 1961.)

மேலும் அந்த அறிஞர் கூறுவது: "காவியப் போக்கினைக் கவனித்தாலும் வேங்கடம் பற்றிய குறிப்பு காவிய நிகழ்ச்சியுடன் எவ்வாற்றானும் பொருந்துமாறு இல்லை. இக் குறிப்பு நிகழ்ச்சிகளுடன் இணையாமல் தனியாகக் கிடப்பதனால் இஃது இடைச் செருகலாகவும் இருத்தல் கூடும். வேங்கடத்திற்கும் அங்கு எழுந்தருளியிருக்கும் மூர்த்திக்கும் புகழ்தேடுவதற்காகவே யாரோ ஒருவரால் மேற்கொள்ளப் பெற்ற திட்டம் போல் தோன்றுகின்றது. பெருங்கவிஞராகிய இளங்கோவடிகள் தம்முடைய சமயப் பொது நோக்கைப் புலப்படுத்திக் கொள்வதற்காகவே இப்படிச் சேர்த்திருப்பார் என்று கொள்வதற்கில்லை; அப்படிக் கொண்டாலும் திருவரங்கம் என்ற வைணவ தலத்தைக் குறிப்பிடுவதனாலேயே அக்குறிக்கோள் நிறைவு பெற்று விடும்" என்பது.

இன்னும் அவர் கூறுவது: "திருவரங்கத்தை வருணிக்கும் பகுதியில் ஈற்றடியாகிய "திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்" என்பதிலுள்ள உம்மையை நீக்கியும், திருவேங்கடம்



அங்கு எழுந்தருளியுள்ள மூர்த்தி இவற்றின் வருணனையை முற்றிலும் நீக்கியும் படித்தால்,

40 திருவமமார்பன் கிடந்த வண்ணம்
52 என்கண் காட்டென்று என்உளம் கவற்ற
53 வந்தேன் குடமலை மாங்காட்டுள்ளேன்

என்பதாக அமைந்து, பொருளும் பாட்டின் அமைப்பும் கெடாது பொருந்தும் என்று கூறி திருவேங்கடத்தைப் பற்றிய வருணனை முற்றிலும் இடைச்செருகலே என்று பின்னும் வற்புறுத்திச் செல்வர். பின் பழகிய பெருமாள் சீயர் அருளிய ஆறாயிரப்படி குரு பரம்பரையிலும், இராமாநுசரின் திவ்விய சூரி சரிதையிலும் காணப்பெறும் உடையவர் காலத்தில் திருமலையில் நிகழ்ந்த சைவ சமய வாதத்தைப் பற்றிய குறிப்புகளை எடுத்துக் காட்டி இந்தச் சூழ்நிலையில் திருமலையை வைணவ தலம் என்பதை நிலைநாட்டவே இத்தகைய இடைச் செருகல் யாரோ ஒருவரால் நிகழ்ந்திருத்தல் வேண்டும் என்று கூறி தன் முடிவுக்கு அரண் அமைத்துக்கொள்வர்.

**பிள்ளையவர்களின் முடிவுபற்றி என் கருத்து:**

பிள்ளையவர்களின் முடிவு சரியானது என்பதை எந்த ஆய்வு மனமும் உடனே ஒப்புக்கொள்ளாது. மேற் குறிப்பிட்ட சிலப்பதிகாரப் பகுதியினை அடுத்து மதுரைக்குச்செல்லும் வழியை விளக்கிய பின்னரி அடுத்து வரும்,

நீள் நிலம் கடந்த நெடுமுடி அண்ணல்
தாள் தொழு தகையேன் போது வல்
(சிலம்பு—காடுகாண்- அடி 148-49)

என்ற அடிகளால், மாங்காட்டு மறையோன் தன்னைத் திருமாலடியான் என்று குறிப்பிடுகின்றான். திருமாலின் திவ்விய தேசங்கட்கு திருத் தலப் பயணமாகப் புறப்பட்டவன் என்றும் சொல்லிக் கொள்ளுகின்றான். மாங்காட்டு மறையோன் கோவலனுக்கு மதுரைக்குச் செல்லும் வழியை விளக்கிய பின்னர் கோவலன் மறையோனை வினவியதற்கு மறுமாற்றமாக வருகின்றன திருவரங்கம் திருவேங்கடம் இவற்றின் வருணனைகள். மாங்காட்டு மறையோன் தான் பார்க்க வேண்டிய திவ்விய தேசங்களைப்பற்றி முன் சென்று திரும்பியவர்களிடமிருந்து தெரிந்து வந்திருத்தல் கூடும். ஒரு பக்தன் பிறிதொரு பக்தனிடம் திருத்தலங்கள் பற்றிய செய்திளைக் கூறுங்கால் வழிகளை மட்டிலும்தான் கூறுவான் என்று கருதுதல் தவறு. அவன், தான் செவி வழியாகக் கேட்டவற்றையும், தான் நேரில் சென்று காணுங்கால் உள்ளக் கிளர்ச்சியால் தன் மனத்தில் எழுந்த கருத்துகளையும் கூட்டியும் குறைத்தும் கூறியிருத்தல் கூடும். எப்பொழுதும் தொலைவிலுள்ள இடம் பார்க்க விழைவார்க்கு அதிகக் கவர்ச்சியையூட்டும் என்பது நம் அநுபவமாகும். திருவேங்கடம்பற்றித்தான் கேட்டவற்றால் மறையோனின் மனத்தில் அதிகக் கவர்ச்சியை எழுப்பியிருத்தல் கூடும். அந்தக் கவர்ச்சியின் காரணமாக அந்த ஊரையும் அங்குள்ள மூர்த்தியையும் சற்று அதிகமாகவே அம்மறையோன் வருணித்திருத்தல் கூடும். மறையோன் மதுரைக்கு வழித்திறம் கூறும்பொழுதும் திருமால்குன்றத்தைக் குறிப்பிடுங்கால் தன் இறையன்பு மேலீட்டால் கேட்போர் திறம் நோக்காது ஆங்குள்ள வியத்தகு செய்திகளை யெல்லாம் விரித்தோதுவதனைக் காணலாம். இங்ஙனம் கூறுவது இறையன்புடையாரின் இயல்பு என்பதைத் தெரிவிக்கவே இளங்கோவடிகளும் அவன் பேசுமளவும் பேசவிடுகின்றனர் என்று கருதலாம். எனவே நேரில் கண்ட திருவரங்கத்தைக் குறைவாகவும் இன்னும் சென்று காணாத திருவேங்கடத்தை அதிகமாகவும் மறையோன் வருணித்துள்ளான் என்பதை மட்டிலும் காரணமாகக் கொண்டு திருவேங்கடத்தைப் பற்றிய வருணனை இடைச் செருகல் என்று பிள்ளையவர்கள் கூறுவது சிறிதும் பொருந்தாது என்பது காய்தல் உவத்தல் இன்றி ஆராய்வார் மனத்தில் தோன்றும் கருத்தாகும்.

தவிர, இன்னோர் உண்மையையும் ஈண்டு அறிதற்பாலது. சிலப்பதிகாரம் வரலாற்று அடிப்படையில் அமைந்த காவியமாயினும் அஃது ஒரு வரலாற்று நூல் அன்று. கண்ணகி வரலாற்றைச் சாத்தனார் மூலம் அறிந்த இளங்கோவடிகள், மேலும் அவளுடைய வரலாற்றைப்பலர் மூலம் நன்கு தெரிந்து தெளிந்து, தம் கற்பனையையும் துணைக்கொண்டு காவியம் அமைத்தபொழுது எத்தனையோ செய்திகளைவிட்டும் இருக்கலாம். பல செய்திகளைக் கற்பனையால் சேர்த்துக்கொண்டும் இருக்கலாம். ஈண்டு நாம் காணும் இரண்டு இட வருணனைகளும் மாங்காட்டு மறையோனின் வாயில் வைத்துப் பேசப் பெற்றதாலும் அதனைக் கூறுபவர் இளங்கோ அடிகளே யாவர் என்பதை நாம் மறத்தலாகாது. திருவரங்கத்தைக் குறைவான அடிகளிலும் திருவேங்கடத்தைஅதிகமானஅடிகளிலும் கூறியவர் இளங்கோவடிகளேயன்றி மாங்காட்டு மறையோன் அல்லன். எனவே ஒன்றன் குறைவையும் மற்றதன் நிறைவையும் காரணமாகக் கொண்டு நிறைவாக வுள்ளதை இடைச் செருகலாகக் கொள்ளல் எவ்வாற்றானும் பொருந்துவதன்று, பொதுவாக இக்கால ஆராய்ச்சியாளர்கள் சமாதானம் சொல்ல முடியாததற்கெல்லாம் எளிய வழியாகக் கைகொள்ளும் முறைகளில் இடைச் செருகல் ஒன்று தள்ளிவிடுவது ஒன்றாகும்.

**வேங்கடத்தின் புகழ்:**

திருப்பதியின் புகழ் சமயச்சார்புடையது என்று முன்னர்க் குறிப்பிட்டேன். அதனை ஈண்டு தெளிவாக்குவேன். ஆழ்வார் பெருமக்க

ளால் மங்களாசாஸனம் செய்யப் பெற்ற திருவேங்கடம் பதினொன் றாம் நூற்றாண்டில்தான் பெரும் புகழ் அடையத் தொடங்கியது. இராமாநுசர் திருவேங்கடத்தின் மீதுள்ள திருக்கோயிலின்பால் காட் டிய அக்கறையும் அவருடைய சொந் தப் பெருமையும் சிறப்புமாகச் சேர்ந்து திருக்கோயிலின் பெரு மையை மிகவும் உயர்த்திவிட்டது.

இராமாநுசர் திருமலைககு மூன்று தடவை வந்ததாக அவரது வரலாற் றால் அறியக்கிடக்கின்றது. இன்று திருமலையில் நடைபெறும் வழி பாட்டு முறைகள்யாவும் இராமா நுசர் வகுத்தவையே என்று 'திரு மலையொழுகு' என்ற நூலால் அறி கின்றோம். இராமாநுசர் திருவேங் கடமுடையானுக்குக் கைங்கரியம் செய்யும் அர்ச்சகர்க்குக் குடியிருப்பு வசதிகள், பிற வசதிகள் இவற்றைச் செய்தார். தம் தாய்மாமனாகிய திரு மலைநம்பியையே இவற்றையெல் லாம் கண்காணிக்கும் மேலாளராகவும் நியமனம் செய்தார். இராமாநுச ருடைய சமூகச் சீர்திருத்தமும் அவ ருடைய தத்துவம் ஞானமும் பாமர மக்கள் மனத்தையும் கவர்ந்தன. அவருடைய வடமொழி அறிவு அவ ருக்குப் பலவகையில் கைகொடுத்து உதவியது. அவரது கீதைப்பேருரை யும் பிரம்மசூத்திரப் பேருரையும், (இரண்டும் வடமொழியில் உள்ளவை) அவரை வடநாட்டினருக்கும் அறி முகம் செய்துவைத்தன. இதனால் இராமாநுசரின் புகழ் நாட்டின் நாலா புரங்களிலும் பரவியது. இதனால் அவர் மிக நெருங்கிய உறவுடன் கைங் கரியம் செய்துவந்த திருவேங்கட முடையானின் பெருமையும் சிறப்பும் எங்கும் பரவி அவன் கோயில் கொண் டிருக்கும் திருவேங்கடத்திற்கும் ஒரு முக்கியத்துவம் ஏற்படலாயிற்று. இவற்றைத் தவிர சைவ-வைணவ வாக்குவாதம்பற்றிய வரலாறும் திரு மலையின் புகழ் எங்கும் பரவக்காரண மாக அமைந்தது. இது பற்றிய வர லாறு சுமார் 700 ஆண்டுகட்கு முன் பிருந்த பின்பழகியப் பெருமாள் சீயர் அருளிய ஆறாயிரப்படி குருபரம்பரை யிலும் இராமாநுசாச்சாரியரின் திவ் விய சூரி சரிதையிலும் காணலாம்.

திருவேங்கடத்தப்பனைச் சைவர் கள் 'எங்கள் நாயனார்' எங்கள் தலைவர் என்று உரிமை கொண்டா டியதாக ஆறாயிரப்படி குருபரம்பரை தெரிவிக்கின்றது. இங்ஙனம் உரிமை கொண்டாடுவதற்குப் பேயாழ்வாரின் ஒரு பாசுரம் ஒரு காரணமாக இருந் தது.

தாழ் சடையும் நீள் முடியும்
தண் மழுவும் சக்கரமும்
சூழ் அரவும் பொன் நாணும்
தோன்றுமால்—சூழும்
திரண்டருவி பரவும்
திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் நன்றாய்
இசைந்து. (மூன். திருவந்-63)

என்ற பாசுரம் அரி-அர வடிவத்தைக் காட்டுவது. இப்பெருமா னிடம் சடையும் கிரீடமும் காணப்படுகின்றன. மழுவும் சக்கர மும் காணப்படுகின்றன. சிவபெரு மானுக்குரிய பாம்பாகிய அணியும் இவரிடம் தோன்றும், திருமாலுக் குரிய பொன் நாணும் தோன்றும் என்கின்றார் ஆழ்வார். 'திரண்டு அருவி பாயும் திருமலை மேல் எந் தைக்கு' உரியதொரு நிலை என்று பேயாழ்வார் சைவத்தொடர்பையும் ஒப்புக்கொள்வது போல் அமைந்துள் ளது இப்பாசுரம். இதிலிருந்து சிவச் சின்னங்களும் பேயாழ்வார் காலத் தில் திருவேங்கடமுடையானுக்கு உரி யனவாக இருந்தன என்று கருது வோர் இன்றும் உளர். இவர்கள் இந்த நிலை உடையவரால் மாற்றப் பெற்றது என ஊகிக்கின்றனர். தங் கள் ஊகத்திற்கு ஆதாரமாக குரும் பரம்பரைக் கதைகளையும் சுட்டிக் காட்டுகின்றனர். இதனைப் பொறு மையுடன் ஆராய வேண்டும்.

ஆறாயிரப்படி குருபரம்பரையில இராமாநுசர் சைவர்களை நோக்கி, 'உங்கள் தம்பிரானுக்கு (கடவுளுக்கு) அசாதாரண சின்னமான திரிசூல-டம ருகத்தையும், எங்கள் பெருமாளுக்கு அசாதாரண சின்னமான திருவாழி திருச்சங்காழ்வார்களையும் (சக்கரத் தையும் சங்கையும்) பண்ணித் திரு வேங்கடமுடையான் திருமுன்பே வைக்கலாம். அவர் எத்தை எடுத்துத் தரித்துக்கொள்ளுகின்றாரோ அத் தையிட்டு அவர் சொரூப நிரூபணம் பண்ணக்கடவது' என்று சொன்ன தாக வருகின்றது. இதிலிருந்து இரா மாநுசர் காலத்தில் வேங்கடவன் சங்கு சக்கரங்களைத் தரித்திருக்க வில்லை என்பது புலனாகின்றதல் லவா? என்று கேட்கின்றனர். இஃது ஒரு முக்கியமான கேள்வி.

ஆறாயிரப்படி குருபரம்பரையைத் தொடர்ந்து நோக்கினால் பின் பழ கிய பெருமாள் சீயர் மேலும், 'அவ் வாயுதங்களைப் பண்ணி அவர் சந்நிதி யிலே வைத்துக் கருப்பக் கிருகத்தில் ஒருத்தருமில்லாதபடி சோதித்துத் திருக்காப்பைச் சேர்த்துக் கொண்டு புறப்பட்டுவந்து......" என்று கூறு வதைக் காணலாம். காலை வேளை யில் பூட்டைத் திறந்து பார்க்கும் போது சங்கும் சக்கரமும் தரித்துக் கொண்டிருந்தாராம் பெருமாள். திரி சூலத்தையும் டமருகத்தையும் அணிந்து கொள்ளவில்லையாம். இத னால் ஒரு சூழ்ச்சி நடந்திருக்கக்கூடும் என்று கருதுவர் சிலர்.

வேறு குருபரம்பரைக் கதைகளில் இச்செய்தி சிற்சில கூட்டல் கழித்தல் களுடன் காணப்படுகின்றது. 'பிரபந் நாம்ருதம்' என்ற நூலில் வேங்கடத் தெம்மானுக்குத் திருமார்பில் இராமா நுசர் திருமகளின் உருவை அமைத் தார் என்ற செய்தி காணப்படு கின்றது.

மேற்கூறிய வரலாறுகளேயன்றி இன்னொரு வரலாறும் வழங்கி வரு கின்றது. பெரும் பக்தனான தொண்

டைமான் சக்கரவர்த்திக்குச் சங்கு சக்கரங்கள் பெருமானால் அளிக்கப் பெற்ற ஐதிகம் ஒன்று உண்டு. திரு வேங்கடத்தல புராணத்தில் 'இராமா நுசன் பிரார்த்தனைப்படி சீநிவாசன் சங்கு சக்கரம் தரித்த அத்தியாயம்' என்பது 29-வது அத்தியாயமாகக் காணப்படுகின்றது. இதில் "தொண்டைமான் சக்கரவர்த்தி வெற்றி பெரும்பொருட்டு, முன்பு தன் சங்கு சக்கரங்களை அவன் கையில் கொடுத்து அவனுக்கு வரம் கொடுத்த படியாகவே பல நாள் சீநிவாசப்பெரு மான் தன் சங்கு சக்கரங்களை உல கினர் கண்களுக்குப் புலப்படாதபடி ஒளித்து வைத்திருந்தனன். இதனைக் கருத்திற்கொண்டு திவ்விய கவியும் தலைவியின் பிரிவாற்றாமை கண்டு செவிலி இறங்கு துறையில்,

'முனித்தொண்டை மான்கையில் சங்
காழி நல்கி
ஒள் மூரல் செவ்வாய்க்
கனித்தொண்டை மான் கையில் சங்
காழி கோடல்
கருமம் அன்றே '
(திருவேங்கடத்தந்தாதி-53).

(மூரல் - புன்முறுவல்; கனித் தொண்டை-கோவைப்பழம்; சங்கு-வளையல்; ஆழி;மோதிரம்).

எனப்பாடி மகிழ்ந்துள்ளார் என்று கருதலாம். அப்பெருமானின் திரு வடிவைக் கண்டவர்கள் தம் தம் கருத் துக்கு இயைந்தபடி அரன் என்றும் குமரன் என்றும் மாயவன் என்றும் பலவாறு சொல்லிச் சமய வாதங்க ளால் வேறுபாடு உற்றுப் பகைமை கொள்வார்கள்" என்று காணப்படு கின்றது.

இந்தச்சூழ்நிலையில் இராமாநுசர் திருப்பதிக்கு வந்ததாக இத்தலபுரா ணம் தெரிவிக்கின்றது. 'பண்டைய வேதநெறியோடு திருக்குருகூரின்கண் வந்த மெய்ஞ்ஞானத் தமிழ் மறை யாகிய திருவாய்மொழி ஒங்கும்படி செய்து, சரசுவதி தலைமேல் கொண்டு பாராட்டும்படி ஸ்ரீ பாஷ்யம் இயற் றிய' எதிராசர் என்று இராமாநுசர் இங்கே குறிக்கப்பெறுவதைக் காண் கின்றோம். இவர் வேங்கடமா லையை அணுகி அங்குள்ள குதர்க்க வாதிகளை வாதத்தால் வென்று அடக்கி 'வேங்கடத்து அண்ணலை வாழ்த்தினார்' என்றும் இத்தல புரா ணம் நுவல்கின்றது. 'உலகினர் யாவரும் அறியுமாறு சங்கு சக்கரங் களைத் தாமரைக் கைகளில் தரித் தருளித் தரிசனம தந்தருள வேண்டும் என்று இராமாநுசர் வேண்டிக் கொள்ள, அவ்வண்ணமே அப்பெரு மான் தரிசனம் தருவான்' என்று எதிர்காலம் உரைப்பதுபோல் கூறு கின்றது தலபுராணம். இது,

பகையணங்கு ஆழியும்
பால் வெண் சங்கமும்
தகைபெறு தாமரைக்
கையில் ஏந்தி

என்று சிலம்பில் வருவதை நினை வூட்டுவதாகக் கருதலாம்.

கையிலுள்ள சங்கு சக்கரங்கள் திரு மாலின் எல்லாவித ஆற்றலுக்கும் அறிகுறி. மார்பில் உள்ள பெரிய பிராட்டியார் சத்தியத்தின் மார்பில் தான் உண்மையான அழகு திகழும், அருள்பொலியும் என்றபெருண்மைக்கு நினைவுக்குறி இத்தகைய பேருண் மைகளை நிலைநாட்டி நாட்டை வாழ்வித்தார் உடையவர் என்ற வரலாற்றுச் செய்தியைத்தான் வினோதமாகவும், ஓர் அளவு இரச மாகவும், சிவபக்தர்களுக்குச் சற்று விரசமாகவும், வைணவ குருபரம் பரை வரலாறுகள் குறிப்பிடுகின்றன.

**கோதண்டபாணிப்பிள்ளையின் மற்றொரு கருத்து :**

பிற்காலத்தில் வடவேங்கடத்தில் நேரிட்ட மாற்றத்தைக் குறிப்பிடும் முறையில் பூதத்தாழ்வாரின் இரண்டு பாடல்களைச் சான்றுகளாகக் காட்டி விளக்குவர். அச்சான்றுகள்பற்றியும் ஈண்டு ஆராய்வோம். பூதத்தாழ் வார் இம்மலையை இளங்கிரி எனச் சுட்டுவதாகக் காட்டுவர். பிள்ளைவர் கள் முன்னர்க்குறிப்பிட்ட ஆங்கிலக் கட்டுரையில்,

நெறியார் குழற்கற்றை முன்னின்று
பின் தாழ்ந்து
அறியாது இளங்கிரி என்(று) எண்ணி—
பிறியாது
பூங்கொடிகள் வைகும் பொருபுனற்
குன்றென்றும்
வேங்கடமே யாம் விரும்புமவெறபு.

இரண். திருவந்-53. (இளங்கிரி-சிறுமலை)

இப்பாடலில் 'இளங்கிரி' என்ற சொல் 'சிறு மலை' என்று பொரு ளில் ஆளப்பெற்றுள்ளது என்றும், இது பல நூற்றாண்டுகளில், தொல் காப்பியர் காலத்திலிருந்து முதலாழ் வார்களில் ஒருவராகிய பூதத்தாழ் வார் காலம் வரையில் உள்ள காலப் பகுதியில், நிலவியல் கூறுகளின் அடிப் படையில், இம்மலைகட்கு ஏற்பட்ட மாற்றத்துக்கு ஒரு சான்றாக அமை கின்றது என்றும் விளக்குவர்.

மேலும் அவர் கூறுவது; 'வேங் கடம்' என்று வழங்கும் இப்பகுதியில் இப்பொழுதுகூட மலைகளின் பல் வேறு அழிவு மாற்றங்களைக் காண லாம். கோடைக்காலத்தில் கதிரவ னின் கடும் வெப்பமும், மாரிக்காலத் தில் பெய்யும் மழையும் இப்பகுதியி லுள்ள சில பறைகளைப் பெரும் பெரும் பிறைத்துண்டுகளாகப் பிளவு படச் செய்துள்ளன. சில பாறை களைச் சில கூரிய கற்குவியலாகவும் கூழாங்கற்களாகவும் சிதைத்துள்ளன. இன்னும் சிலவற்றை மணலும் மண் ணும் கலந்த மேடுகளாகவும் மாற்றம் அடையும்படிச் செய்துவிட்டன. இத னால் இம்மலைப் பகுதியில் தாவரங் கள் தலைகாட்டுவதற்கு வாய்ப்பும் நேரிட்டது. ஒரு காலத்தில் வழுக் கைப்பாறைகளாக இருந்தவற்றில் பசுமையும் செழுமையும் தலைக் காட்டத் தொடங்கியது.

(47-ம் பக்கம் பார்க்க)

(20-ம் பக்கத் தொடர்ச்சி)

ரிஷி வசனத்தின் ஸத்யத் தன்மை நிலை பெற்றது. குழுமியிருந்த மந்திரிகளும் முனிவர்களும் பரீக்ஷித்திற்கு ஆக வேண்டிய காரியங்களைச் செய்தனர். அவன் மகன் ஜனமே ஜயனை மன்னனாக்கி முடி சூட்டினர்.

தன் இல்லம் திரும்பிய காச்யபன் இனி ஊரில் சுகமாக, கௌரவமாக வாழலாம் என்று எண்ணி இறுமாந்திருந்தான். திடீர்ப் பணக்காரன் ஆன இவனை உற்றாரும் உறவினரும் நெருங்கத் தயங்கினர். இவன் ஈட்டிய செல்வத்தின் பயனோ என்னவோ, அனைவரும் இவனை வெறுத்து ஒதுங்கினர்.

இது கண்டு மனம் நொந்தான் காச்யபன். தாம் ஏதேனும தவறு செய்து விட்டோமோ என அஞ்சினான். அவ்வூரில் வாழப் பிடிக்காமல் வேறு ஊர் சென்றான். இவன் எங்குச் சென்றாலும் காரணமின்றி வெறுப்புக்கு ஆளானான். செல்லுமிட மெங்கும் யாவரும் வெறுக்கக் காரணம் அறியாமல் பதை பதைத்தான்.

ஒரு சமயம சாகலயர் என்ற முனிவரைப் பற்றி கேளவிப் பட்டான். அவரைத் தேடிச் சென்று சரண் புகுந்தான. திருவடிகளிலே வீழ்ந்து புலம்பினான்.

'ஐயனே! ஹரிவல்லப! அனைவரும் என்னை நிந்திககின்றனா. எனக்குத் தெரிநது நான ஒரு பாவ மும செய்த தாயத் தெரியவிலலை. என்னைச் சேர்ந்தவாகளும், என உறவினர் களுங்கூட என்னை ஒதுக்கிவிட்டனர். யாது காரணம் எனறு அறியாமல் தவிக்கிறேன். தாங்கள் தான் காப்பாறற வேணடும்.'

मुनयो ब्राह्मणांश्चन्ये मां निन्दन्ति सुहृज्जना:।
नास्याहं कारणं जाने किं मां निन्दन्ति मानवा:॥

# திருவேங்கட நூற்றந்தாதி

## நேரிசை வெண்பா

தேன்கக்கும் பூம்பொழில்கள் தான்வடிக்கும் சீதளத்தை
வான் பக்கம் விண்ணோர்க்கும் வார்த்திடும்— யன் தொக்கி
ஊட்டம் வடிக்கும் உறவாளன் வாழும்நம்
வாட்டமழி வேங்கட வெற்பு

வெற்பென்னில் வேங்கடம் வம்பருள் சிந்திடும்
பொற்கோவில் பொன்னரங்கம் பூத்திரும்—நற்பயன்
ஈந்திடும் நீள்மால் இணைகச்சி எம்பிரான்
ஏந்துவான் என்றன் இடர்.

இடர்கள் களையநல் இன்பங்கள் யாவும்
நடமிட்டு நம்மிடம் நீட்ட—தடஇளந்
தோப்பிடை விண்தொட்டுத் தூக்கி நம்மை வாவென்று
கூப்பிட்(டு) அழைத்திடும் குன்று.

குன்றாதான் எண்ணத்தில் காண்கில் குறையில்லா
ஒன்றானான் ஒப்பிலா தொன்றுமானான்—நின்று
நெடுமாலாய் நேமியாளும் நாதன் வினைகள்
விடுபட வாாத்திடுவான் வீடு.

வீடாய் விரிவடைந்து வீடடைய அன்பர்க்கு
நாடும் வழியினை நல்கி பின—கூடவிருந்து
பின்னும இடையூறைப் போக்கும் திருமலை
இனைமுதிற் குண்டோ இணை.

இணைபிலா யிப்பிறவி இனபங்கள் யாவும்
பிணையிலா மாயன் பொறுப்பே— அணையிலா
வெள்ளம்போல் ஆழ்நதருள் பொங்கும் அருளாளன்
உள்ளத்தில் நின்றான் உயர்ந்து.

உயர்ந்தவன் தாழ்ந்தோன் உயர்ந்தது தாழ்ந்தே
அயர்ந்த தெனப்பிரித் தாளும்—மயர்வுகள்
இல்லா தருளும் இறையுறை வேங்கடம்
மல்லையாய் நிற்கும் மலை.

மலையின் சரிவெல்லாம் மந்திரம் சொல்லும்
அலைநீர் வண்ணனை ர்க்கும்—சிலைசேர்
திருமலை தேவன் செவிசாய்த் தங்கே
அருவிபோல் பெய்வான் அருள்.

அருணவத்தின் ஆதார மென் றாகியதன் மீதில்
அரவத் தணையில் அகன்று—கருநிறம்
தனனிறம காட்டும் தடங்குன்றில் நின்றமால்
புன்கண் பழிப்பான் பொதிந்து.

பொதியும் பெருமணம் பொன்மணி வண்ணன்
சதிர்தனைச் சொல்லும்மலை நழ்ந்தே—மதியாய்
வீரவும் மறையோனவாழ் வேங்கட வெற்பு
வரமாய் விளையும்நல் வெற்பு

வெற்பை விரித்து விரிநீள் அரவத்தைக்
கிற்பொடு சுறறிக் கடையுங்கால்—பொற்பொடும்
ஆமையாய்த் தாங்கி அருளிய வேங்கடக்
கோமானை நெஞ்சகமே கொள்

கொள்வான் கொடுங்கூற்றின் கண்நான் விழுந்துபட்டால்
எள்ளளவும் ஐயமிதில இல்லையில்லை—உள்ளில்
உறையும் திரு 'லை ஓங்கினான் நாமம்
பறைசாற்ற லேவென் பணி.

திரு. வி. ஆர். ஸ்ரீநிவாஸ இராகவன், M.SC.,
சென்னை-44. (தொடரும்)





ஓம் ஸ்ரீ மாத்ரே நம:

# பொதுமக்களுக்கு ஓர் அரிய நற்செய்தி



**ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள், திருமுருக கிருபானந்தவாரியார் மற்றும் பல மகான்கள் ஆசி வழங்கிய நவசக்தி நிலையத்தாரால உருவாக்கப்படும் பூஜைக்கு உரிய தெய்வீக சாதனங்கள்.**

| வ.எண். | யந்திரங்களின் பெயரும் அதன் பலன்களும | விலை ரூ.பை. |
|---|---|---|
| 1. | பூர்ண ஸ்ரீ சகக்ர மகாமேரு பஞ்சலோகம் அனைத்துத் தெய்வங்களும் இதில் அடங்கியது (மர பீடம் உட்பட) 6½×6½ செ.மீ. ரூ. 750/- 5×5 செ.மீ. | 450-00 |
| 2. | ஸ்ரீ மகா கணபதி 8×8 செ. மீ. எந்தக் காரியமும் தடையின்றி நடக்க | 130-00 |
| 3. | ஸ்ரீ சக்கரம் 8×8செ.மீ. அனைத்து தெய்வங்களும் இதில் அடங்கியது | 130-00 |
| 4. | ஸ்ரீ மகாலட்சுமி மகாயந்திரம் 24×24 செ. மீ. 300 ஆண்டுகளுக்கு லட்சுமி கடாட்சத்தை ஏற்படுத்தி நிலைத்திருக்கச் செய்யும் (கோல்ட் பிரேம்) | 1150-00 |
| 5. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம் ஸ்ரீ சாம்ராஜ்யலட்சுமி ஸ்ரீ மகா சுதர்சனம் 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) (மூன்று யநதிரஙகள் சேர்த்து) வியாபாரத்தில் விருத்தியடையவும் லட்சுமி கடாட்சம், பண வரவுக்கும்,எதிரிகள் பொறாமை இவைகளை நீக்கி சுபிட்சத்தைஉண்டுபண்ணும் | 1750-00 |
| 6. | சர்வ ஜன மன தன ஆகாஷணம சாம்ராஜ்ய லட்சுமி ஸ்ரீ சுதர்சனம் 8×24 செ. மீ. (கோல்டு பிரேம்) மேற்கண்ட பலனை தரவல்லது | 500-00 |
| 7. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா 8×24 செ.மீ. (கோல்டு பிரேம்) | 500-00 |
| 8. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா, 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) மூன்று யந்திரங்கள் சேர்ந்தது வியாபாரத்திலோ, வீட்டிலோ நவக்கிரக தோஷங்களை நீக்கி எதிரிகள் இல்லாமல் செய்யவும் பில்லி, சூனியம், ஏவல்களை நீக்கி, லட்சுமி கடாட்சம் தரவல்லது. | 1750-00 |
| 9. | ரசமணி ஒன்றின் விலை ரூ. 250/-, ரூ. 500/- இது மனதை ஒரு நிலைபடுத்தும், சர்வ காரிய சித்தியும் சுகபோக பாக்கியங்களையும் தரவல்லது. | |
| 10. | கண் திருஷ்டி ஒருபுறம். மறுபுறம் சுதர்சன டாலர். கண் திருஷ்டியால் ஏற்படும் தொல்லைகளை நீக்கி எதிரிகளிடமிருந்து பாதுகாக்க வல்லது. | 70-00 |
| 11. | ஸ்ரீ சக்கரம் ஒருபுறம், மறுபுறம் ஸ்ரீ காமாட்சி டாலர். அம்பாள் கடாட்சத்தை ஏற்படுத்திச் சிரமங்களை நீக்க வல்லது. | 70-00 |
| 12. | ஸ்ரீ காமட்சி ஒருபுறம், மறுபுறம் தனுகர்ஷண டாலர். அம்பாள் கடாட்சமும், பொருள் வரவும் தரவல்லது. | 70-00 |
| 13. | சௌடாம்பிகை மாங்கல்ய பாக்கிய டாலர். அம்பாள் கடாட்சமும், பெண்கள் தீர்க்க சுமங்கலியாக இருக்கவும், கணவனுக்கு அதிர்ஷ்டத்தை உண்டாக்கவும் வல்லது. | 70-00 |
| 14. | விவாகப்ராப்தி டாலர். தடைப்பட்டு வந்ததிருமணம் தடையின்றி நடக்கும் | 70-00 |
| 15. | ஸ்ரீ சக்கரம் லட்சுமி பீஜம் டாலர் அம்பாள் கடாட்சத்தை நிலைத்திருக்கச் செய்யவல்லது | 70-00 |
| 16. | கண் திருஷ்டி படம் (கோல்டு பிரேம்) வீட்டிலும் வியாபாரத்திலும் வைப்பதால் கண் திருஷ்டி தொல்லைகள நீக்கி விபத்துக்களைத் தடுத்துக் காப்பாற்ற வல்லது | 70-00 |
| 17. | தத்தாத்ரேயர் யந்தரம் 12×12 செ. மீ. (கோல்டு பிரேம்) கண திருஷ்டி, பொறாமை, துர்தேவதைகளால் ஏற்படும் தொல்லைகளை நீக்கிக் காப்பாற்ற வலலது | 150-00 |
| 18. | பூஜைக்கு உரிய பஞசாயதன செட்டும், பாணலிங்கம், ஸ்படிக லிங்ககம் பலவிதமான மாலைகள் மாலைகள் சுத்த வெள்ளியால் செயயபபட்டவையும் இன்னும் பலவிதமான சாதனங்களும் கிடைக்கும் பூஜைக்குரிய பாதுகை இஙகு கிடைககும. | |

கோவில்களுக்கு வேண்டிய சகல யந்த்ரங்களும், கிராம தேவதைகளுக்குரிய சகல யந்தரங்களும் கிடைக்கும். ஒன்றின் விலை ரூ. 105/- ஸ்பெஷல்: கோவிலில் ஜன ஆகர்ஷணம், தன ஆகர்ஷணம் செய்யக்கூடிய யந்தரத்தில் விலை ரூ. 300/- வெளிநாட்டுக்கு 25% அதிகம். விலைப்பட்டியலுக்கு 0-50 பைசா தபால் தலையுடன் கீழ்க்கண்ட விலாசத்திற்கு விணணப்பிக்கவும். மேற்கண்ட யந்திரங்களின் பலன்களை ஓரளவுதான் பத்திரிகைகளில் தெரிவிக்க முடியும்.

ஸ்வாமிஜி ஸ்ரீ முருகபூஷணம்

ஸ்ரீ வித்யா உபாசகர், தலைவர் நவசக்தி நிலையம்,

153, லாயட்ஸ் ரோடு, (ஸ்டேட் பேங்க் எதிரில்), கோபாலபுரம், சென்னை - 600086.

**போன்: கடை ... 472013 மா மேரு டிரஸ்டு வீடு: ... 861254**

**" லோகாஸ் சமஸ்தாஸ் சுகினோ பவந்து "**

சாகல்யர் கண்மூடி நிஷ்டையில் ஆழ்ந்தார். ஞான திருஷ்டியினால் காச்யபனின் வரலாறு அறிந்தார்.

'காச்யாபா! தக்ஷகனின் விஷத்தை நீக்கும் ஆற்றல் பெற்றிருந்தும் நீ விஷரோகத்திலிருந்து மன்னனைக் காக்காமல் வாளாயிருந்து விட்டாயே. இதற்கு என்ன பிராயச் சித்தத்தைச் செய்வது. தெரிந்தே இப்படி ஒரு தவறு செய்துவிட்டாயே.

தன் தீச்செயலால் அகால மிருத யுவை யடைந்த மன்னனை நீ உன் தவத்தால் காத்து, இறுதியில் இயற்கையாக வரும் மரணத்தை மட்டும் தழுவும்படிச் செய்திருக்கலாம். செய்கையில் தவறிவிட்டாய். பொருளின் பால் கொண்ட ஆசையின் காரணமாக நீ தவறிவிட்டாய் போலும்.

ஒருவன் மரணத் தறுவாயில் இருப்பது போல் தோன்றினாலும்கூட மருத்துவ சிகிச்சை செய்தே தீர வேண்டும்; காலத்தின் கதியை யாரே அறிவார்; 'ஒரு வேளை பிழைக்கவுங் கூடும்' என்று மருத்துவ நிபுணர்கள் கூறுவார்களே. இப்படி ஒரு தவறை அறிந்தே செய்து விட்டு, இங்கு வந்து நிற்கிறாயே.'

**यावत्कण्ठगताः प्राणा मुमूर्षोर्मानवस्य हि ।**
**तावच्चिकित्सा कर्तव्या कालस्य कुटिला गतिः॥**
**इति प्राहुः पुरा श्लोकं भिषग्विद्याब्धिपारगाः॥**

'ஐயனே! முற்றும் உணர்ந்த மெய் ஞானியே! தவறை உணர்ந்து வருந்து கிறேன். இப்பாவம் நீங்க எனக்கு ஒரு உபாயம் கூற வேண்டும். எதனைச் செய்தால் என் உறவினர்களும், எனக்கு வேண்டியவர்களும் என்னிடம் முன் போலவே பிரியமுடன் பழகுவார்களோ, அதனை நான் செய்யத் தயாராயிருக்கிறேன். இனி இது போன்ற தவறு செய்ய மாட்டேன். இது உறுதி', என்றுகூறிப் பணிந்து நின்றான் காசியபன்.

**ममैतदघोघशान्त्यर्थं उपायं वद सुव्रत ।**
**येन मां परिगृह्णीयुर्बान्धवाः ससुहृज्जनाः ॥**



ஸ்வாமி புஷ்கரணி

**कृपां मयि कुरुष्व त्वं शाकल्य हरिवल्लभ ॥**

'காசியபனின் புலம்பலைக் கேட்டு மனமிரங்கிய சாகல்ய முனி சிறிது நேரம் கண்மூடி தியானத்தில் ஆழ்ந்தார். பின் கூறினார்:

காசியபா! உன் பாவத்திற்குப் பரிகாரம் கூறுகிறேன். சிறிதும் தாமதியாமல் சோம்பலின்றி உடனே செய்.

**तस्य पापस्य शान्त्यर्थं उपायं प्रवदामि ते ।**
**तत्कर्तव्यं शीघ्रं विलम्बं मा कुरु द्विज ॥**

சுவர்ணமுகியின் கரையில் லக்ஷ்மீ பதியான ஸ்ரீநிவாசன் கோயில் கொண்டுள்ளான். இத்தலம் வேங்கடாத்ரி என்று அழைக்கப்படுகிறது. எல்லா உலகினரும் இங்கு வந்து பரமனை பூஜித்துச் செல்வர்.

**सुवर्णमुखरीतीरे लक्ष्मीपतिनिवासभूः ।**
**वेङ्कटाद्रिरितिख्यातः सर्वलोकेषु पूजितः ॥**

வேங்கடமே விண்ணோர் தொழுவது
வும் மெய்ம்மையால்
வேங்கடமே மெய்வினை தீர்ப்பதுவும்-
வேங்கடமே
தானவரை வீழத் தன்னாழிப் படை
தொட்டு
வானவரைக் காப்பான் மலை.

இதற்கு ஈடான திருத்தலமே கிடையாது. எல்லா பாவங்களையும் அழித்து மங்கலம் நல்கும் 'ஸ்வாமி புஷ்கரிணீ' என்ற பரம பாவன தீர்த்தம் இங்கேதான் இத்திருக்கோயிலுக்கு வட புறத்தில் அமைந்துள்ளது.

**स्वामिपुष्करिणीचेति सर्वपापप्रणोदिनी ।**
**उत्तरे श्रीनिवासस्य वर्तते मङ्गलप्रदा ॥**

அன்பனே! உடனே வேங்கடகிரியைச் சென்றடைவாய். மங்கலம் நல்கும் ஸ்வாமி தீர்த்தத்தில் முறைப்படி ஸங்கல்பம் செய்து கொண்டு நீராடி, அதன் கரையில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீவராஹமூர்த்தியை வழிபட்டு பாவம் நீங்க பிரார்த்தித்துக் கொள். பின் பெருமாளை முறைப்படிச் சேவிக்கச் செல்வாயாக.

**तं गत्वा वेङ्कटं शैलं स्वामिपुष्करिणीं शुभां ।**
**स्नात्वा संकल्पपूर्वं तु वराहस्वामिनं हरिं ।**
**सेवित्वा पश्चिमे तीरे निर्यात्य हरिमन्दिरम्॥**

தேவர்க்கெல்லாம் தேவனும், மூவர்க்கும் நாதனுமான ஸ்ரீநிவாசன் அங்கு எழுந்தருளியிருக்கிறான். பக்தர்களைக் காப்பதே தலையாய கடமை என்று கருதி பரமனால்

## விண்ணப்பம்

தி. தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரர் கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத் தொகையினை தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராஃப்ட்' (D. D.) அல்லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்பவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

எடுக்கப்பட்ட பரிபூர்ண அர்ச்சாவதாரம் இது தன்னை வணங்குவோர் இடர் நீக்க சக்கரத்தையும், அவர் வாழ்வில் யாவற்றிலும் வெற்றி காண சங்கத்தையும், எப்போதும் மகிழ்ச்சியுடன் விளங்கும் வாழ்வருள வடிவெடுத்தவனாய் எழுந்தருளியிருக்கிறான்.

श्रीनिवासं परं देवं भक्तानामभयप्रदम् ।
शङ्खचक्रधरं देवं वनमालाविभूषितम् ।
दृष्ट्वा निर्धूतपापोऽसि संशयं मा कृथाः द्विज ॥

உள்ளன மற்றுளவாப் புறமே சில
மாயம் சொல்லி
வள்ளல்! மணிவண்ணனே! என்
றென்றும் உன்னையும் வஞ்சிக்கும்
கள்ள மனம் தவிர்ந்தே உன்னைக்
கொண்டுய்ந் தொழிந்தேன்
வெள்ளத்தனைக் கிடந்தாய்! இனி
உன்னை விடடு என கொள்வனே!

என்று உளமுருகி வேண்டி அவன் திருவடித் தாமரைகளை உறுதியாகப் பற்றிக் கொண்டுவிடு. உன் பாவங்கள் நீங்கி நலம் பெறுவாய்' என்று கூறி சாகல்யர் ஆசீர்வதித்து அனுப்பினார்.

காச்யபன் உடனே கிளம்பி பல கட்நாள் பயணம்செய்து திருவேங்கடமலை யடைந்தான். நியமத்துடன் முறைப்படி ஸங்கல்பம் செய்துகொண்டு ஸ்வாமி தீர்த்தத்தில் நீராடினான். ஸ்ரீ வராகப் பெருமானை வணங்கி வேண்டிக் கொண்டான். பின் திருக்கோயில் புகுந்தான். மாலவன் அழகில் மயங்கி மனமுருகி பிரார்த்தித்தான்.

பேராசையால் தான்செய்த பாவம் குறித்து வருந்தி அழுதான். திருவடித் தாமரைகளைப் பற்றி நின்றான். என் வினை தீர்க்க வேண்டும் என்று வேண்டி நின்றான். இனம் தெரியா இன்ப உணர்வு உள்ளத்தில் எழுந்தது.

உள்ளத்தில் உத்தமனை ஏற்றிக் கண்டு, தியானித்து, உணர்ந்து, பலவாறு போற்றி, பிரிய மனமின்றி, தன் ஊர் திரும்பினான்.

இவனைச் சார்ந்தவர்களிடத்தே பெரும் மாற்றம் ஏற்பட்டிருந்ததைக் கண்டான். எல்லா நட்பினரும், உறவினரும், மற்றவரும் திருவேங்கடவனைத் தரிசித்து வரும் மந்திரராஜனான காசியபனை ஊர் எல்லையிலேயே பூர்ண கும்பத்துடன் எதிர்நோக்கி ஆர்வத்துடன் வரவேற்றனர். இவனுக்கு முன்போலவே கௌரவம் அளித்துப் போற்றினர்.

காச்யபன் ஸ்ரீ ஸ்வாமி புஷ்கரிணீ தீர்த்தத்தின் மகிமையையும், பரமனின் தயையையும் எண்ணி எண்ணி நெகிழ்ந்தவனாய், பக்திப் பரவசத்திலேயே ஆழ்ந்தவனாக ஆகிவிட்டான்.

सर्वे बन्धुजना विप्रा काश्यपं ब्राह्मणोत्तमम् ।
पूजयित्वा विधानेन पुज्योऽसि न संशयः ॥

பரந்தாமனிடத்து உண்மை பக்தி ஏற்பட்டபின் பொருளாசை இவனைப் பற்றி நிற்குமோ! பகலவன் கண்ட இருள் போல மறைந்து விட்டது. பக்தியின் பெருமையால் பல்லோராலும் போற்றப்படும் பாங்குடையனாக ஆனான்.

முனிவர்களே! புண்ணிய சரித்திரமான காச்யபனின் இவ்விதிகாசத்தை எவன் சொல்கிறானோ, எவன் கேட்கிறானோ, அவன் பரம பக்தனாக ஆவான். இறுதியில் விஷ்ணு லோகத்தையும் அடைவான்."

एवं वः कथितं विप्रा वेङ्कटाचलवैभवम् ।
यः श्रृणोति नरोभक्त्या विष्णुलोके महीयते ॥

இவவாறு ஸ்ரீ ஸூதர் அன்றைய தினம் இரவு ஸ்ரீ ஸ்வாமி தீர்த்த மகிமை பற்றி கூறி அனைவரையும் பரவசத்தில் ஆழ்த்தினார். அனைவரும் திருவேங்கடவனை உளமுருக பிரார்த்தித்து, அகக்கண்ணால் கண்டு தியானித்த வண்ணம் உறங்கச் சென்றனர்.

நமக்கு ஒரு வழி காட்டியாக அமைந்திருக்கிறது இவ்விதிகாசம். இன்றைய உலகில் பொருள் ஈட்டும் மும்முரத்தில் பல வகையிலும் தவறு செய்வது மனித இயல்பு. நாம் அனைவரும் அறிந்தோ அல்லது அறியாமலோ பொருளாசையினால் செய்த பாவங்களை நீக்கிக் கொள்ள இன்றே திருமலை செல்வோம், ஸ்வாமி தீர்த்தத்தில் நீராடி வழிபடுவோம். குறைவிலா வாழ்வளிக்கும் கோவிந்தன் நம் குறையும் நீக்கி நலமருள்வது திண்ணமன்றோ!



# கரும்பு தின்னக் கூலியா?



உலகிலுள்ள பல்வேறு இனிய பதார்த்தங்களில் கரும்பே மிகவும் இனியது என்றால் மிகையாகாது. உலகோர்க்குக் கரும்பு இனியது போல ஆழ்வார் போன்றார்க்கு எம்பெருமான் இனியனாவான். அவன் தங்களுக்கு மிகவும் இனியன் என்பதை விளக்க அவனைத் தேனே, பாலே, கன்னலே என்றாப் போல் பல இனிய பொருள்களாகவே கூறுகின்றனர் ஆழ்வார்கள். இவற்றுக்கெல்லாம் சிகரமாக நம்மாழ்வார் எம்பெருமானை "கட்டியைத் தேனை அமுதை நன் பாலைக் கனியைக் கரும்பு தன்னை" (திருவாய்மொழி 3-10-3) என்று வர்ணிக்கிறார். இங்குக கட்டி தேன், அமுது, பால், கனி, கரும்பு என்று ஆறு இன்சுவைப் பொருள்களைக் கூறியது ஆழ்வார் எம்பெருமானே தமக்கு அறுசுவையடிசில என்று காட்டியபடி எனற இனசுவைப் பொருளைப் பெரியோர் காண்பிக்கின்றனர்.

திவயதேச நிலவளம் :

திவ்ய தேசங்களை மங்களா சாஸனம் பண்ணின ஆழ்வார்கள் அவற்றின நிலவளத்தை வர்ணிக்கும்போது பலஇடங்களில் அங்குக்கரும்பு செழிப்பாக விளைகிறது என்று பாடுகின்றனர். 'செறுவில் செந்நெல் கரும்போடோங்கு திருக்குருகூர்' (திருவாய்மொழி 4-10-10), 'சேறுகொள் கரும்பும் பெருஞ்செந்நெலும்மலிதண் சிரீவர மங்கை' (திருவாய்மொழி 5-7-10), "ஆடுறுதீங் கரும்பும் விளை செநநெலுமாகி எங்கும், மாடுறு பூந்தடம் சேர் வயல்சூழ் தண் திருவல்லவாழ்" (திருவாய் மொழி 5-9-8), 'வாய்க்கும் கரும்பும் பெருஞ் செந்நெலும் வயல் சூழ் திருவாறன் விளை' (திருவாய்மொழி 7-10-4), 'ஊர்வளம் கிளர்சோலையும் கரும்பும் பெருஞ் செந்நெலும் சூழ்ந்து, சீர்வளம் கிளர் தண்பணைக் குட்ட


திரு. லா. ஸ்ரீநிவாஸன்,
புதுதில்லி.


நாட்டுத் திருப்புலியூர்' (தி-மொ 8-9-4) 'அணி திருமோகூர் எண் திசையும் ஈன் கரும்பொடு பெருஞ் செந்நெல் விளைய கொண்ட கோயிலை' (திருவாய் மொழி 10-1-5) என்றவை காண்க.

கரும்பு கண வளர்தல் .

திருமங்கையாழ்வார் திருநாங்கூர் வைகுந்த விண்ணகரைப் பாடும் திருமொழியில் 'இளம்படி நற்கமுகு குலைத்தெங்கு கொடிச் செந்நெல் ஈன்கரும்பு கண் வளரக்கால் தடவும் புனலால், வளம் கொண்ட பெருஞ் செல்வம் வளரும் மணி நாங்கூர்' (பெரிய திருமொழி 3-9-7) என்று இருந்தமிழ் புலவனான தமது வாக்வன்மையைக் காட்டியருளினார். இளமையை இயல்பாகவுடைய தென்னை மரங்களும், வெற்றிலைக் கொடிகளும், செந்நெற்பயிர்களும், இனிய கரும்புகளும் ஆகிய இவை நாடோறும் செழித்தோங்கி வளரும்

படி அடியிலே பாய்கின்ற தண்ணீரி னால் அழகு மிகுந்ததும், மிக்க ஐச் வர்யம் பொருந்தியிருப்பதும், அழகி யதுமான நாங்கூர் என்றபடி.

கரும்புக்கு நீர்ப்பாசனம் :

மேலே ஈன்கரும்பு கண் வளர்த்த தைப் பார்த்தோம். இப்போது தீங் கரும்பு கண் வளரும்படியைக் காண் போம்.

கோங்கரும்பு சுரபுன்னை குரவார்
சோலை குழாவரி வண்டிசை பாடும்
பாடல் கேட்டு
தீங்கரும்பு கண் வளரும் கழனி
சூழ்ந்த திருக்கோவலூர்.
(பெரிய திருமொழி 2-10-4)

கோங்கின் பூக்களும் ஸுர புன்னை களும் செறிந்திருக்கிற சோலை களிலே கூட்டங்கூட்டமாகக் கூடிய அழகிய வண்டுகள் மதுபான மயக்கத் தாலே இசை பாடுகிற பாடல்களைக் கேட்டு அத்தாலே நீர் பாய்ந்தாற் போலே இனிய கரும்புகளானவை ஒரு கண் ஏறி வளரப் பெற்ற கழனி களினால் சூழப்பட்ட திருக்கோவ லூர் என்றபடி.

இவ்இடங்களில் கரும்பு கண் வளர் தல் என்பது தூங்குவதைச் சொல் வதல்ல. கரும்பிலுள்ள கணுக்கள் வளர்கின்றன, அதிகமாகின்றன என்ற படி.

கரும்பின் கழைதின்ற மேதிகள :

திருநாங்கூர் மணிமாடக் கோயி லைப் பாடும் பரகாலன் கரும்பின் கழையைத் தின்ற இளமேதிகளை வர்ணிக்கிறார். இதையும் பாட வேண்டுமோ! என்று எண்ணவேண் டா. திவ்யதேசத்து எம்பெருமான் கள் எப்படிஉத்தேச்யர்களோ அப்ப டியே ஆழ்வார்களுக்கு அங்குள்ள ஐந்துக்களும் அவைகளின் செயல் களும் உத்தேச்யமே என்று அறிக.

"ஒங்குபைந்தாள்
கன்னார் கரும்பின் கழைதின்று
வைகிக் கழுநீரில் மூழ்கிச்
செழுநீர்த் தடத்து
மண்ணேந்திளமேதிகளவைகுநாங்கூர்
மணிமாடக்கோயில்
வணங்கென் மனனே!
(பெரிய திருமொழி 3-8-6)

வயல்களிலே இளைய எருமைகள் உயர்ந்து பசுங்கால்களையுடைய கணுக்கள் நிரம்பப் பெற்ற கரும்புத் தலையடியை மிதம்மிஞ்சி மேய்ந்து, தன்னளவல்லாதபடித்தின்கையாலே நகர்ந்து செல்ல மாட்டாமல் அவ் விடத்திலேயே இடம் வலம்கொண்டு விடாயாறி, பிறகு மெல்ல நடந்து சென்று செங்கழுநீர்ப் பூக்களோடு கூடிய அழகிய நீர் நிரம்பிய தடாகத் திலே மூழ்கி, சேற்றிலே கொம்பு களைக்குத்தி மண்ணுருண்டைகளைப் பெயர்த்தெடுத்துத் தாங்கிக் கொண்டு கிளம்பி, பின்பு கரையேற வும் முடியாதபடி அவ்விடத்திலேயே கிடக்கும் நாங்கூர் என்றபடி.

இப்பாசுரத்தை பிள்ளை விழுப் பரையரும் ஆப்பானும்கூடி அநுஸந் தித்துப் பொருள் நோக்குங்கால், மூன்றாமடியில் ஒரு முறை "வைகி" என்று வந்திருக்க, நான்காமடியில் மறுபடியும் "வைகி" என்று வரக் காரணம் யாதோ? என்று ஸந் தேகித்து பட்டரைப் பணிந்து கேட்க, அவரும் "அவ்விடத்து எருமைகளின் ஸௌகுமார்யம் விளக் கப்பட்டதாகிறது; முரட்டு எருமை களாயிருந்தால் பதறிப்பதறி நடக் கும்; ஸுகுமாரமான எருமைகளா கையாலே வைகிவைகிக் கிடக்கிற படி" என்று அருளிச் செய்தாராம்.

இயற்கை வர்ணனையில் கரும்பு :

ஆழ்வார்கள் இயற்கையை வர்ணிக்குமிடங்களில் கரும்பு முக்ய மான இடத்தையுடையது என்பதைக் கீழ்க்கண்ட உதாஹரணங்களில் காண லாம்.

கானமாமுல்லை கழைக்கரும்பேறி
வெண்முறுவல் செய்தலர்கின்ற
தேனின் வாய்மலர் முருகுகுக்கும்
திருவெள்ளறை.
(பெரிய திருமொழி 5-3-5)

கரும்பு நுனியளவும் சென்று படர்ந்து வெண்மையான புன் சிரிப் பைச் செய்வன போல விகஸியா நின்ற பெரிய காட்டு முல்லைப் பூக்கள் வண்டுகளின் வாய்களிலே தேனைப் பெருக்கா நிற்கப் பெற்ற திருவெள்ளறை என்றபடி.

சீர்தழைத்தகதிர்ச்செந்நெல் செங்
கமலத்திடையிடையின்
பார்தழைத்துக் கரும்போங்கிப் பயன்
விளைக்கும் திருநறையூர்.
(பெரிய திருமொழி 6-9-7)

அழகிய கதிர்களையுடைய செந் நெற்பயிர்களினுடையவும் அவற்றை யடுத்து முளைத்த செந்தாமரைகளி னுடையவும் நடுநடுவே கரும்புகளா னவை உயர எழுந்து தரையிலே படிய வளர்ந்து பலன்களைக் கொடுக் கப் பெற்ற திருநறையூர் என்றவாறு.

கடியுடைக் கமலமடியிடை மலரக்
கரும்பொடு பெருஞ்செந்நெலசைய
வடிவுடையன்னம் பெடையொடும்
சேரும் வயல் வெள்ளியங்குடி
(பெரிய திருமொழி 4-10-9)

பரிமளத்தோடு கூடின தாமரைப் பூக்கள் கரும்புகளினுடையவும் செந் நெற்பயிர்களினுடையவும் அடி நிலங் களிலே மலரப் பெற்றதும், கரும்பு களும் பெருத்த செந்நெற்கதிர்களும் அசைந்து கொண்டிருக்கப் பெற்றதும் அழகிய வடிவையுடைய அன்னப் பறவைகள் பேடைகளோடு கூடப் பெற்றதுமான கழனிகளையுடைய திருவெள்ளியங்குடி என்று வர்ணித்த வாறு.

எம்பெருமானே கரும்பு :

எம்பெருமானின் இனிமையை மன திற் கொண்டு அவனையே கரும்பாக உருவாக்குகின்றனர் ஆழ்வார்கள். "கரும்பார் சோலை சூழ்ந்த அரங் கமா கோயில் கொண்ட கரும்பினைக் கண்டு கொண்டு" (திருமாலை 17, திருக்குறுந்தாண்டகம் 13); "கடன் மல்லைக் கிடந்த கரும்பே!" (பெரிய திருமொழி 7-1-4) போன்றவை காண்க.

**விலக்ஷணமான கரும்பு :**

எம்பெருமான் ஒரு விலக்ஷணமான கரும்பு என்பதை "தொண்டர்கள் சிந்தையுள்ளே முளைத்தெழுந்த தீங் கரும்பினை" (பெரிய திருமொழி 2-5-1) என்பதனால் காண்பித்தார் கலியன். பக்தர்களுடைய சிந்தையாகிற தோட்டத்திலே முளைத்து அங்கேயே அபிவ்ருத்தியடைகிற மதுரமான கரும்பு என்றபடி.

அது மட்டுமா? "அமுதம் பொதி இன்சுவைக் கரும்பினை" (பெரிய திருமொழி 7-10-1) என்பர் மேலும். அமுதத்தை நீராகப் பாய்ச்சி அதனால் வளர்ந்த இனிய சுவையுடைய கரும்புபோல் மதுரமானவன் என்று காட்டியபடி.

இதற்கு மேலும் "வெண்ணெயுண்டு உரலினிடை ஆட்புண்ட தீங் கருப்பினை" (பெரிய திருமொழி 7-3-5) என்றும் அருளினார். ஒரு கரும்பு உரலினிடை ஆட்புண்டதென்கிறார். உரலிலே கட்டுண்டவன் கண்ணபிரானல்லன், ஒரு கரும்பு தான் கட்டுண்டது என்கிறார் போலும். உரலில் கட்டுண்ட நிலைமையிலே அவனுடைய ஸௌசீல்யம் வெளியானபடியைத் திருவுள்ளம் பற்றி இங்ஙனே அருளிச் செய்தபடி. யசோதை கண்ணி நுண் சிறுத்தாம்பினால் கண்ணனை உரலோடு இணைத்துக் கட்ட முடியாமல் வருந்தி நிற்குமளவிலே, கண்ணன் தன் திருமேனியை "சுருக்குவாரை இன்றியே சுருங்கினாய்" (திருச்சந்த விருத்தம் 109) என்றபடி தானே சிறுக்கடித்துக் கொண்டு கட்டுண்டு தனது ஸௌசீல்ய, ஸௌலப்யாதி குணங்களை வெளியிட்டுக் கொண்ட ஸௌசீல்யத்திலே ஆழ்வாருடைய திருவுள்ளம் ஆழ்ந்ததாயிற்று.

**கரும்பின் இன்சாறு :**

எம்பெருமானைக் கரும்பு என்று மட்டும் கூறித் திருப்தி பெறாத ஆழ்வார்கள் அவனைக் கரும்பின் இனிய சாறு என்று ஒரு படிமேல் சென்று அவனது இனிமையின் மேன்மையைக் காண்பிக்க முயல்கின்றனர். "கனியைக் கரும்பின் இன்சாற்றை" (திருவாய்மொழி 3-5-6), "தேனிடைக் கரும்பின் சாற்றை" (திருக்குறுந் தாண்டகம் 8), "தீங்கரும்பின் தெளிவே!" (பெரிய திருமொழி 7-2-9), 'கரும்பினிடைத் தேறலை' (பெரிய திருமொழி 7-10-2) ஆகியவை காண்க.

**விலக்ஷணமான கருப்பஞ்சாறு :**

எம்பெருமானுடைய போக்யதை லோக விலக்ஷணம் என்பதை சிக்ஷிக்க அபூர்வமான கரும்பின் ரஸம் அவன் என்கிறார், திருமங்கை மன்னன். 'வரையிடைப் பிரசமீன்ற தேனிடைக் கரும்பின் சாற்றை' திருக்குறுந்தாண்டகம் 8) என்பது காண்க. தண்ணீர் பாய்ச்சப் பெற்று வளர்கின்ற கரும்பின் சாறு போன்றவன் என்றால் சிறிதும் த்ருப்தி பிறவாமையாலே, தேனீக்களாலே மலையிலே உண்டு பண்ணப்பட்ட தேனே விளை நீராக வளர்ந்த கரும்பு இருக்குமானால் அதன் சாறு போன்றவன் எம்பெருமான் என்னலாம் என்பது கருத்து.

**சர்க்கரை :**

கரும்பு என்றும் கரும்பின் இன் சாறு என்றும் சொன்னால் போதுமா? அவற்றிற்கும் மேலான சர்க்கரை என்ன வேண்டாமோ? ஆழ்வார்களையும் விஞ்சிய ஸ்வாமி தேசிகனே இவ்விதம் அருள வல்லவர்.

प्रपद्येतं गिरिं प्रायः श्रीनिवासानुकम्पया ।
इक्षुसारस्रवन्त्येव यन्मूर्त्या शर्करायितम् ॥

(தயா சதகம்)

திருவேங்கட மலையில் எழுந்தருளியுள்ள ஸ்ரீநிவாஸனது எல்லையற்ற கருணை அடியார்களிடம் வெள்ளமிட்டு ஓடுகின்றது. அக்கருணை அநுபவிக்க இனிதாயுள்ளது; கரும்பின் சாறு தானே ஓர் ஆறாய்ப் பெருகினாற் போலுள்ளது; கரும்பின் சாறு கடைசியில் சர்க்கரையாகி கனமாய் உறைந்து கற்கண்டாக ஆவது தானே இயல்பு. ஸ்ரீநிவாஸனது கருணை வெள்ளமென்னும் கருப்பஞ் சாற்றின் ஆறு இந்தத் திருவேங்கட மலை என்னும் வடிவு கொண்ட சர்க்கரையாகிப் பின்னும் கனமாய் உறைந்து அனைவரும் அநுபவிக்க ஏற்றதாயுள்ளது. இந்தக் கருணை தான் இந்தத் திருமலை வடிவமாய்த் தோன்றியது. கருணைக் குணங்களுள் தலை சிறந்தது; அடியார்களின் குற்றங்களைப் பொறுக்கச்செய்வது; வேண்டிய பலன்களையெல்லாம் அளிக்கச் செய்வது; ஆற்று வெள்ளம் போல் தடையற்று அடியார்களின்மீது பெருகுவது; மலைபோல் அசைக்க முடியாதது; இத்தகைய கருணையே வடிவெடுத்த திருமலையைச் சரணம் அடைகிறேன் என்பது மேலே குறித்த ச்லோகத்தின் கருத்தாகும்.

உரலிடை ஆட்பூண்டதை முன்பு அநுபவித்தோம். இப்போது ஆழ்வார்களிடை நெருக்குண்டதை இப்போது அநுபவிப்போம்.

कासारपूर्वकविमुख्यविमर्दजन्मा
पण्णातटेक्षुसुभगस्य रसो बहुस्ते ।
त्वत्पादपद्ममधुनि त्वदनन्य भोग्ये
नूनं समाश्रयति नूतनशर्करात्वम् ॥

(தேஹளீசஸ்துதி 7)

இதன் கருத்தாவது: ஆற்றின் கரையில பயிராகிச் செழித்த கரும்பை ஆலையில் இட்டுப் பிழிந்தெடுக்கும் சாறு மிக இனியதாயிருக்கும். அந்தச் சாறு தாமரையினின்று பெறும் உயர்ந்த தேனுடன் கலந்துவிட்டால் அதன் இனிமைக்கு எல்லையில்லை. திருக்கோவலூர் எம்பெருமான் பெண்ணையாற்றின் கரையில் செழிப்பாய் வளர்ந்த கரும்பாம். அந்த கரும்பை முதலாழ்வார்கள் நெருக்கியபடியால் ஆலையில் அரைத்தது போலாயிற்று. அவ்வாறு நெருக்கியதிலிருந்து, உயர்ந்தவன் தாழ்ந்தவர்களுடன் இடையீடின்றிக் கலந்ததாகிய ஸௌசீல்யம் என்னும் குணம் வெளியானபடியால் அதுவே கருப்பஞ்சாறாக ஆயிற்று. அது உறைந்துபுதிய சர்க்கரையாயிற்று. வேறு தெய்வத்தையும் வேறு பயனையும் நாடாத பரமைகாந்திகள் எம்பெருமானின் திருவடித் தாமரையின் தேனைப் பருகி அநுபவிக்கும்போது அந்த ஸௌசீல்ய குணமென்னும் கருப்பஞ்

சாறு உலகத்தில் ஒரு புது சர்க்கரை யாக ஆகின்றது. தேனில் சர்க்கரை யைக் கலந்தது போல் உன் திருவடி களை அநுபவிக்கும் போது ஸௌசீல்ய குணம் தோன்றிக் கலந்து அவ்வநுபவத்தைப் பரம போக்ய மாக்குகின்றது.

கரும்புவில் :

**इक्षुः पेशलमौर्वी** என்ற ஸங்கல்ப ஸூர் யோதய ச்லோகத்தில் ஸ்வாமி தேசி கன் காட்டியபடி கரும்பு மன்மதனு டைய வில்லாகும். அவனுடைய அம்புகள் புஷ்பங்களே. வீணைக்கம்பி போல் இனிய ஒலியை உடைய அழ கிய வண்டு நிரை நாண் கயிறாகும். ருக்மிணிப் பிராட்டியினிடத்து மன் மதனுடைய அம்சமாக ப்ரத்யும்னன் பிறந்ததனால் மன்மதன் கண்ண பிரானுடைய புதல்வனென்பது நூல் கொள்கை. மேலும் எம்பிரானே **साक्षान्मन्मथमन्मथः** மன்மதனுக்கு மேற் பட்ட மன்மதன் என்று வர்ணிக்கப் பட்டுள்ளான். அப்படிப்பட்டவனின் புருவம் மன்மதன் வில்லைப் போன் றுள்ளது என்றால் ஆச்சர்யமேது?

இன்னுயிர்க்கேழையர்மேல் வளை
யுமிணை நீலவிறகொல்?
மன்னிய சீர்மதனன் கருப்புச் சிலை
கொல்? மதனன்
தன்னுயிர்த்தாதைகண்ணபெருமான்
புருவமவையே
என்னுயிர் மேலனவாயடுகின்றன
என்றும்நின்றே.
(திருவாய்மொழி 7-7-4)

என்றது பராங்குச நாயகியின் அநு பவம். இதன் பொருளாவது; இனி மையான உயிரைக் கவர்வதற்காக பெண் பிறந்தார் மேலே தானே வளைந்து நலிவதான நீல நிறததை யுடைய இரண்டு விற்களோ? அழியா அழகுடையனான மன்மதனுடைய கரும்பு மயமான வில்தானோ? மன் மதனுக்கு அபிமதனான பிதாவாகிய கண்ணபிரானுடைய அந்தத் திருப் புருவங்களே எனது உயிரையே கனி சித்து என்றும் ஒருபடிப்பட நின்று நலிகின்றன. "தன்கைசார்ங்கமதுவே போல் புருவ வட்டமழகிய" (நாச்சி யார் திருமொழி 14-6) என்ற ஆண் டாள் பாசுரத்தின்படியே புருவத் திற்கு வில்லை உவமை கூறுவதுண்டு என்று அறியத்தக்கது.

கரும்பின ஸ்வாபதேசம :

" நோக்கும் பக்கமெல்லாம் கரும்பொடு
செந்நெலோங்கு செந்தாமரை
வாய்க்கும் தண்பொருநல் வடகரை
வண்தொலை வில்லி மங்கலம்"
(திருவாய்மொழி 6-5-6)

என்று தொலைவில்லிமங்கலத்தை நம்மாழ்வார் வர்ணிக்கிறார். இங்கு கரும்பு, செந்நெல், செந்தாமரை என்னுமிவை ஸ்வாபதேசத்தில் (உள் ளுரையில்) அங்குள்ள ஸ்ரீ வைஷ்ண வர்களின் விலக்ஷணமான ப்ரக்ருதி யைத் தெரிவிக்கின்றன என்பர் பெரி யோர். எங்ஙனேயென்னில், கரும்பு என்பது மதுர ப்ரக்ருதிகள் என்கை. செந்நெல் என்றது "வரம்புற்ற கதிர்ச் செந்நெல் தாள் சாய்த்துத் தலை வணங்கும் தண்ணரங்கமே" (பெரியாழ்வார் திருமொழி 4-9-8) என்று பெரியாழ்வார் அருளியபடி வித்யைகள் நிரம்பப் பெற்று விநயமே வடிவெடுத்திருக்கும்படி சொன்ன வாறு செந்தாமரை என்று தேனீக் கள் போன்ற ஸாரக்ராஹிகளால் ஸேவிக்கப்படும் தன்மையைச் சொன் னபடி. ஆக, மதுர ப்ரக்ருதிகளாய், வித்யா விநய ஸம்பந்தர்களாய், ஸாரக்ராஹிகளால் ஆச்ரயிக்கப்பட்ட வர்களான ஸ்ரீ வைஷ்ணவ சிகாமணி கள் நிறைந்த தலம் என்றதாயிற்று.

கரும்பும் திருமந்திரமும் :

ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ஸாத்யோபாய சோதனாதி காரத்தில் ஸ்வாமி தேசிகன் மூலமந்திரத்தை எட்டு கண்ணுள்ள கரும்பாக உரு வாக்குகிறார்.

மஹா பாரதத்தில் (ஆச்வா 118-14) **तस्मात्प्रणवं शूद्रो मन्नामानि न कीर्तयेत् ।** "ஆதலால் சூத்ரன் என் நாமங் களை ப்ரணவத்தோடு சேர்த்து சொல்லக் கூடாது" என்று பகவ தாஜ்ஞை. நாரதீய கல்பத்திலும்,

**अष्टाक्षरजपः स्त्रीणां प्रकृत्यैव विधीयते ।**
**नस्वरः प्रणवोऽङ्गानि नाप्यन्यविधयस्तथा ।**
**स्त्रीणां तु शूद्रजातीनां मन्त्रमात्रोक्तिरिष्यते ।।**

"எட்டெழுத்தாகிய மூல மந்த்ரத் தின் ஜபமானது ஸ்த்ரீகளுக்கு நான காம் வேற்றுமை யுருப்பில்லாமல் செய்யப்பட வேண்டியதென்று விதிக் கப்பட்டிருக்கிறது. அப்படியே ஸ்வரம், ப்ரணவம், அங்க ந்யாஸம், மற்ற விதிகள் இவை ஒன்றும் கிடை யாது. ஸ்த்ரீகளுக்கும் சூத்ர ஜாதி களுக்கும் மந்த்ர மாத்திரத்தைச் சொல்வதுதான் ஜபம் என்று சாஸ் திரத்தில் சொல்லப்படுகிறது" என்று கூறப்பட்டுள்ளது.

வராஹ புராணாந்தாகத கைசிக புராணத்தில் **नमो नारयणेत्युक्त्वा श्वपाकः पुनरागमत्** "பிறகு நன்றாய்ப் பொழுது விடிந்தவுடன் விழித்துக் கொணடு எம்பெருமானைப் பாடுவது என்கிற வ்ரதம் முடிந்தவுடன் 'நமோ நாரா யண' என்று சொல்லி நாய் மாம்ஸத் தைத் தின்னும் ஜாதியில் பிறந்த நம்பாடுவான் திரும்பி வந்தான" என்று கூறப்பட்டுள்ளது. "வாயி னால் நமோ நாரணாவென்று மத் தகத்திடைக் கைகளைக் கூப்பி" (பெரியாழ்வார் திருமொழி 4-5-2) என்று பெரியாழ்வாரும் "நாமம் சொல்லில் நமோ நாராயணமே" (பெரிய திருமொழி 6-10-1) என்று திருமங்கையாழ்வாரும் அருளியுள் ளனர்.

ஆக, இவற்றிலிருந்து ப்ரவணமும, நான்காம் வேற்றுமையும் தவிர்த்த மிகுதியான மூலமந்த்ரம் யாவரும் அநுஸந்திக்க உரியது என்ற சாஸ்த் ரார்த்தம் தெளிவாகிறது. இதை ஸ்வாமி தேசிகன் "திருமந்தரமாகிற எட்டுக் கண்ணான கரும்பிலே வேர்ப் பற்றும் தலையாடையும் கழிந்தால் நடுவுள்ள அமசம் ஸர்வோபஜீவ்ய மாகிறாப் போலே" என்று அருளி னார். எட்டு எழுத்துக்கள் கொணட திருமந்த்ரத்தை எட்டுக்கண்ணுடைய கரும்பாக உருவாக்கினது காண்க.

இவ்விதம் கரும்பைப் பற்றிய இக் கட்டுரை மிக இனியதாகவே அமைந் துள்ளது எனலாம். இக்கரும்பு தின் னக்கூலியா?

# சீர்கெழு செந்திலும் கந்தபுட்கரணியும்

உறுதியான வீடு பேற்றைத் தரும் தலம்தான் செந்திற்பதி. 'அலைவாய் முருகப் பெருமானுக்குரிய பழமை மிகுந்த சிறந்த பெருந்தலம் சந்தனா ச. ம். கயிலைமலை யனைய செந்தில் பதி, திருச்சீரலைவாய், வேலை நகர், சயந்திபுரி என்ற பல பெயர்கள் செந்தூருக்குண்டு.

உலகம் உய்ய தாருகாசுரன் பத்மா சுரனைச் சங்கரித்து முருகன் எழுந் தருளியுள்ள பழம்பதி திருச்செந்தூர்.

'ஜயம்' 'ஜயம்' என்ற ஒலி இன்றும கேட்டுக் கொண்டேயிருக்கிறதாம். அதனால்தான் ஜயந்திபுரம் என்று பெயர் உண்டாயிற்று. சூரனை சங்கரிக்க முருகவேள் நடத்திய போரில் 'ஜயம்' ஏற்பட்ட நாளி லிருந்து அந்த ஒலி கேட்டுக் கொண்டே இருக்கிறதாம். அத்தலத் தில் ஆரம்பிக்கும் எந்தச் செயலுக் குமே ஜெயம் உண்டு. அதற்கு என்ன காரணம்?

"வெவ்வசுரர் போற்றிசைக்கும் வெஞ்
சூரனைத் தடிந்து
தெவ்வர் உயிர் சிந்துந் திருமுகம்"

தனை அங்கு தானே பார்க்க முடி யும்?

அந்த ஜெயந்தி புரததில் "தங்கி அவன் தாள்களில் புது மலர்களால் அர்ச்சித்தால் உறுதியான வீடு பேற்றை உதவும் தலம் செந்தில் நகர்" என்று முருகனே கூறுகிறான். அடைக்கலம் என்று அவன் தாள் களில் தஞ்சம் புகுந்து விட்டால் பெரும் சிறப்பைப் பெறுவர். அறிவு இல்லாதவர் ஆயினும் செந்தில் வேலனை உள்ளத்தில் தியானியாமல், சீர்கொண்ட பாவங்களைச் செய்பவ ராயினும் அத்தலத்தில் அடைக்கலம் ஆகின்றவர்களுக்கு மேலான நிலைமை மேவச்செய்பவன் முருகன. வறுமை, கொடிய நோய் யாவும் தீர்ந்து நலமாக வாழ்வர்.

செந்திற்பதியில் உள்ள கடல் புண ணியம் செய்திருக்கிறதாம். தினமும் எந்நேரமும் கடல் அலைகள் முருகன் திருப்பாதங்களுக்கு முத்தம் தந்து விட்டு பின்னோக்கிச் செல்கின்றன. மற்ற அலைகள் அவன் பாதம் நணை முன்னேறுகின்றன. அந்த போட்டி யினால் அலைகள் 'ஓம்' என்ற பிரண வத்தை இரவு பகல் பாராது ஒலித் துக்கொண்டே இருக்கின்றன.

அதனால்தான் பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்,

"நண்ணுவார் உறவே எண்ணுவார்
இறையே
நானமறை முடிவில்சொல்
பொருளே
மண்ணும் வானகமும் பண்ணும்ஆள்
வினைஞா
மட்டிலா நடனவெம் பரனே
உண்ணும் வானமுதே கன்னலார்
இமுதே
உயர்நிலைச் சீரலை வாயா
தண்ணமார் சரணாஉனை
மறக்கினும்நா
சாற்றிடும் சரவணபவவே"

என்று பாடி தன நா சரவணபவ என்னும் நாமத்தை சீரலை வாயிலில் சொல்லிக் கொண்டே இருக்கும் என் கிறார்.

அப்படிப்பட்ட பெருமை வாய்ந்த கடலலையில் பக்தர்கள் நீராடி தங்கள் பாவங்களைப் போக்கிக் கொண்டு தூயவர்களாக செந்தி லாண்டவனைத் தரிசிக்கிறார்கள்.

இரண்டாயிரம் திரிசுந்தர அந் தணர் முருகனிடம் "கடலில் மூழ்கு வதற்கு உரிய நாட்களை முன்னோர் கற்பித்துள்ளனர். ...ழுக்கத்துடன் ஏழைகள் நா 'தோறும் நீராடி உயரிய ஆகாய கங்கைபோல் ஒரு தீர்த்தத்தை தந்தருள வேண்டும்" என்று வேண்டினர்.

"வேலையிடை மூழ்குதிரை மேலவர்
விதித்தார்
சிலமுட னேழையர் தினந்தினமு
மூழ்க
வாவியவிண் மாநதியின் வாய்த்த
தொரு தீர்த்தம்
மூலமிடை யீறின்முதல் வாவருள்க
வென்றார்"

திரு இராமலிங்கம,
புதுப்பேட்டை.

உடனே குமரன் மகிழ்வுடன் வெற்றியை உடைய – இலை வடி வாய்–நீண்ட தனது வேல் படையை எடுத்து தெற்கே இருநூறு விற்கிடை அளவு செல்லுமாறு இனிது ஏவி னான்.

அந்தக் கூரிய வேற்படை நிலத்தில் ஊடுருவிச் சென்று பாதாள கங்கை மேல் பாய்ந்து வர வழி செய்து, மேல் மீண்டு வந்து குமரன் கையில் சேர்ந்த... உடன் ஒரு திருக்குளமும் தோன்றியது.

மூலமே இல்லாமல், சுயம்புவாக முளைத்த வேல்முருகன், முதன் முதலில் அத்தீர்த்ததத்துள் வைதிக முறைப்படி தானே மூழ்கினான்.

அந்தப் புண்ணியத் தீர்த்தத்தில் முதன் முதலாக முருகன் மூழ்கிய தாலும், பளபளக்கும் ஞானவேல் உண்டாக்கிய சிறப்பாலும், அந்தத் தண்ணீரில் மூழ்குபவரை இந்திரப் பெருஞ்செல்வ இன்பம் அனுபவிக்கச் செய்வதாலும் கந்தபுட்கரணி என்ற பெயர் பெற்றது.

# ‘ஆழ்வார் திவ்யப் பிரபந்த’ திட்டம்

வைணவச் சமயத்தின் அருமை பெருமைகளை, சாமான்யரும் அறிந்து இன்புறும் வகையில் “ஆழ்வார் திவ்யப் பிரபந்த” திட்டம் ஒன்றினை திருமலை திருப்பதி தேவஸ்தானம் விரைவில் செயல்படுத்த உள்ளது.

இத்திட்டத்தின் கீழ் வைணவ சமய இலக்கியங்களை வெளியிடல், இலக்கியம் மற்றும் திவ்ய தேசங்கள பற்றிய ஆராய்ச்சிகளை மேற்கொள்ளல், ஸ்ரீமந் நாராயணனுடைய வைபவங்களைக் கூறிடும் ஆழ்வார், ஆசார்யர்களின் இலக்கியச் சுவையினை யாவரும் பருகிடும் வகையில் கலை நிகழ்ச்சிகளை நிகழ்த்துதல் போன்றன மேற்கொள்ளப் பட உள்ளன. பல்வேறு தகவல் துறை சாதனங்கள் இத்திட்டத்திற் கெனப் பயன்படுத்த உத்தேசிக்கப்பட்டுள்ளது.

சமூக மற்றும் சமய உட்பூசல்களும், குழப்பங்களும் தமிழ்நாட்டி னைத்தாக்கிட்ட ஒருகாலக்கட்டத்தில், மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்கள் ஸ்ரீய; பதியான ஸ்ரீநிவாசனனின் ஸ்வரூப, ரூபகுணங்களை அநுபவித்து அளித்திட்ட நாலாயிரத் திவ்யப்பிரபந்த பாக்கள் வைணவ இலக்கியத்திற்கு மட்டுமின்றி இந்துசமயஉலகத்திற்கும் ஓர் மறுமலர்ச்சி யினையும், விழிப்புணர்ச்சியினையும் தோற்றுவித்தன என்றேகூறலாம். பல திவ்ய தேசங்களுக்கும், ஆழ்வார்களுக்கும் இடையே அமைந்த உறவு புராண, இலக்கிய, சரித்திர உண்மைகளை விளங்க உரைக்கும் பான்மையன. பின்னர் தோன்றிய வைணவ உடலாகக் கருதப்படும் ராமானுஜர் உள்ளிட்ட பல்வேறு ஆசார்யர்களுக்கு உள்ளமாக ஆழ் வார்கள் விளங்கினர். ஆழ்வார் ஒவ்வொரு வரும் கீதையை உட லாகக் கொண்டு, உபநிஷத்துக்களை மூச்சாககொண்டு, நடமாடும் கோயில்களாக, சமய உணர்வுகளின் ஊற்றாக விளங்கினர் என்றே கூறலாம்.

இவ்வகையில் ஆழ்வார்கள் புகழ் பாடும் இத்திட்டம் நன்முறை யில் செயலாற்றிடத் தங்களுடையமேலான ஆலோசனைகளை கீழ்வரும் முகவரிக்கு அனுப்பிவைககுமாறு வாசகர்களையும், சமயச்சானறோர் களையும் கேட்டுக்கொள்கிறோம்.

டாக்டர் ஆர். சூர்யநாராயண மூர்த்தி,
மக்கள் தொடர்பு அலுவலர்,
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி - 517 507, ஆ. மா.

“முந்துறக் குமரவேண் மூழ்குந்
தன்மையா
லந்தமுற் றொளிரும்வே லளித்த
பான்மையா
லிந்திரப் பெருவள வின்பத்
துய்த்தலாற்
கந்தபுட் கரிணியாய்க் கவின்சி
றந்தவே”

முருகனைத் தொடர்ந்து திரிசுந் தர அந்தணர்களும் அரிய மந்திர நியமப்படி அப்பொய்கையில் நீராடி னர். பின்னர் விண், மண், பாதலம் எனும் மூவுலகிலிருந்தும் நாள் தோறும் மூழ்கலுற மகத்தான இத் தீர்த்தம் மங்களமானது என்று யாவரும் மகிழ்ந்து போற்றுகின்றனர். அதன் இனிமைக்குக காரணம் முரு கன் கைவேல்தான். அது என்ன சாதாரண வேலா?

“வீரவேல் தாரைவேல் விண்ணோர்
சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல்—
வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்
பும் குன்றும்
துளைத்தவேல் உண்டே துணை”

என்று வேலின் மகிமையை அருண கிரியார் பாடியிருக்கிறாரே!

நமக்கு என்றும் துணையாயிருக் கும் தெய்வீக வேலானது தோண்டிய ஊற்று வற்றாத ஊற்றாக இருப் பதில வியப்பொன்று மில்லையே.

தமிழகம் முழுதும் வறட்சி நிலவிய நேரத்திலும்கூட இந்த நாழிக் கிணற் றில் வறட்சி ஏற்பட்டதே இல்லை. முருகன் அருள்போல் அது தொடர்ந்து ஊறிக்கொண்டேதான் இருக்கிறது.

சில அடி தூரத்தில் உப்புக் கரிக் கும் கடல் நீர் இருந்தும் அந்த நாழிக் கிணற்றில் ஊறும் நீர் இனிமை நிறைந்தே காணப்படுகிறது. இனி யோன வெட்டிய கிணறு-முதல் முத லாக இனியோன் மூழ்கிய கிணறு அல்லவா?

இன்றே செந்தூர்சென்று ஜெய ஒலி யைக் கேட்டும் பிரணவம் ஒலிக்கும் கடலில் மூழ்கியும் முருகன் வேலால் தோன்றிய கிணற்றில் மூழ்கியும் செவ்வேளை - செந்திலானைத் தரி சித்து எல்லா நலன்களையும் பெற லாமா?

# திருமலையில் தங்கு வசதிகள்

திருமலையில் யாத்திரிகர்கள் இலவசமாகத் தங்குவதற்கு மின்சாரம் மற்றும் தண்ணீர் வசதிகளுடன் கூடிய அறைகள் கொண்ட சத்திரங்கள் உள்ளன. இத்தங்கு வசதிகளைப் பெற திருமலை பேருந்து நிலையத்திற்கு அருகே உள்ள மத்திய வரவேற்பு அலுவலகத்தை அணுகவும். மேலும் யாத்திரிகர்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளும் வகையில் கொட்டகைகள் மற்றும் கூடங்களும் உண்டு. கட்டணம் செலுத்திப் பெறப்படும் தங்கு வசதிகள் மத்திய வரவேற்பு அலுவலகத்தில் செய்து தரப்படும்.

முன்கூட்டியே தங்கு வசதிகளுக்காக பணம் செலுத்தி பெயர் பதிவு செய்து கொள்ளும் யாத்திரிகர்கள் தங்கு வசதிகளுக்கான கட்டணத்தை காசோலை (D.D.) மூலம் அல்லது மணியார்டர் மூலம் செலுத்தி அக்காசோலையினை அல்லது எம்.ஓ. ரசீதினை திருமலைக்கு வரும் தேதி, தங்கும் நபர்களின் எண்ணிக்கை, செலுத்திய தொகை ஆகிய விவரங்கள் அடங்கிய கடிதத்துடன் இணைத்து குறைந்தது பத்து நாட்களுக்கு முன்பேயே, உதவி செயலாட்சித் தலைவர் (Asst. Executive Officer) வரவேற்பு I (Reception I) தி.தி.தே. திருமலை-517504 எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும். கடிதப் போக்குவரத்து ஆங்கிலத்தில் இருத்தல் அவசியம்.

## தங்கு வசதிகளுக்கான கட்டண விவரங்கள் :

1) ஹில் வ்யூ பாதிக் குடில்கள், சங்கு மிட்டா, சேஷாத்ரி நகர், அஞ்சனாத்ரி நகர், கருடாத்ரி நகர் குடில்கள்

| | | |
|---|---|---|
| ஒரு பகுதி (ஹீட்டர் இல்லாதது) | ரூ. | 15/- |
| எச்.வி.டி.சி. அறைத்தொகுதிகள் (Suites) (ஒவ்வொன்றும்) ஹீட்டர் உள்ளது | ரூ. | 25/- |
| எச். வி. சி. விருந்தினர் விடுதியின் பெரிய அறைத்தொகுதி (ஹீட்டர் உள்ளது) | ரூ. | 50/- |
| எச்.வி.சி. விருந்தினர் விடுதியில் சிறிய அறைத் தொகுதி (ஹீட்டர் உள்ளது) | ரூ. | 25/- |

மேற்கூறிய தங்கு வசதிகளுக்கு முன்பதிவு செய்தல் வேண்டும்.

2) மங்களபாவி குடில்கள், டி. பி. ஸி. மூன்றாவது வரிசை முதலியன

| | | |
|---|---|---|
| டி. பி. வெளிப்பகுதி குடில்கள் (ஹீட்டர் உள்ளது) | ரூ. | 60/- |
| வி.வி.சி., எம்.பி.சி. 31 மற்றும் 26 | ரூ. | 70/- |
| எம்.பி.சி. (ஹீட்டர் உள்ளது) | ரூ. | 50/- |
| டி.பி., ஏ.டி.சி. அறைத்தொகுதிகள் (ஹீட்டர் உள்ளது) | ரூ. | 15/- |
| ஏ. டி. சி. கீழ்த்தளம், முதல் தளம், 'ஏ' 'பி' 'சி' மற்றும் 'டி' பகுதிகள் (ஒவ்வொன்றும்) | ரூ. | 30/- |

ஆர்ஜித சேவை செய்யும் கிருஹஸ்தர்களுக்கு மட்டுமே முன்பதிவு.

3) எஸ். வி. விருந்தினர் விடுதி மற்றும் என். ஜி. ஜி. விடுதியில் உள்ள

| | | |
|---|---|---|
| ஒவ்வொரு அறைத்தொகுதிக்கும் | ரூ. | 50/- |

முன்பதிவு இல்லை.

4) பயணிகள் மாளிகையின் உட்புறக்

| | | |
|---|---|---|
| குடில்கள் | ரூ. | 70/- |
| சிறப்பமைப்புக் குடில்கள் | ரூ. | 100/- |
| எச். ஆர். ஜி. குடில்கள் | ரூ. | 250/- |

முன்பதிவு இல்லை. காலியாக இருப்பின் ஒதுக்கப்படும்.

5) ஹில் வ்யூ சொகுசு குடிலில் மோடி பவன்

| | | |
|---|---|---|
| ஒரு அறைத்தொகுதிக்கு | ரூ. | 250/- |
| ஸ்ரீ நிகேதன் விருந்தினர் விடுதி அறைத்தொகுதி ஒவ்வொன்றுக்கும் | ரூ. | 250/- |
| விருந்தினர் விடுதி முழுவதும் | ரூ. | 750/- |
| இந்திரா விருந்தினர் விடுதி அறைத்தொகுதி 1க்கு | ரூ. | 250/- |
| விருந்தினர் விடுதி முழுவதும் | ரூ. | 1000/- |
| பாலகுடீரம் ஒரு அறைத்தொகுதி | ரூ. | 250/- |
| விருந்தினர் விடுதி முழுவதும் | ரூ. | 1500/- |
| ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி அறைத்தொகுதி ஒன்று | ரூ. | 250/- |
| முதல் தளத்தில் பெரிய அறைத் தொகுதி மற்றும் கீழ்த்தளத்தில் அறைத்தொகுதி (ஒன்று) | ரூ. | 750/- |
| விருந்தினர் விடுதி முழுவதும் | ரூ. | 2500/- |
| கோகுலம் விருந்தினர் விடுதி (குளிர்ச் சாதனம் பொருத்தப்பட்டது) அறைத்தொகுதி (ஒன்று) | ரூ. | 500-/ |
| ஸ்ரீநிவாசா நிலையம் அறைத்தொகுதி (ஒன்று) | ரூ. | 500/- |

(திருப்புக)

ஸ்ரீநிவாசா நிலையம்

| | | |
|---|---|---|
| விருந்தினர் விடுதி முழுவதும் | ரூ | 2500/- |

வித்யா சதன

| | | |
|---|---|---|
| பெரிய அறைத் தொகுதி | ரூ. | 750/- |
| ,, மற்றைய அறைத்தொகுதி | ரூ. | 500/- |

கோதாவரி சதன்

| | | |
|---|---|---|
| அறைத்தொகுதி ஒன்று | ரூ. | 250/- |
| ,, விருந்தினர் விடுதி முழுவதும் | ரூ. | 750/- |

காம்பெல் விருந்தினர் விடுதி

| | | |
|---|---|---|
| அறைத்தொகுதி ஒன்று | ரூ. | 250/- |
| ,, விருந்தினர் விடுதி முழுவதும் | ரூ. | 1000/- |

முன்பதிவு கிடையாது. காலியாகும் தங்கு வசதிகளைப் பொறுத்து ஒதுக்கப்படும்.

தயைகூர்ந்து "உதவி செயலாட்சித் தலைவர், (வரவேற்பு) தி. தி. தே., திருமலை" எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

6) திருமணக் கூடங்கள் :

| | | |
|---|---|---|
| சங்குமிட்டா குடில்கள் கிழக்கு எண். 272, 260, 266, 267 | ரூ. | 100/- |
| டி.பி. குடில் எண். 71 வரிசை III எண்கள் 136 மற்றும் 152 | ரூ. | 100/- |
| ரூயா குடில், கோகினேனி குடில் மற்றும் ஏ.டி.சி. எண். 99 | ரூ. | 100/- |
| சிதம்பரம் செட்டியார் குடில் | ரூ. | 100/- |
| ஸ்ரீ சீதாராம திருமண மண்டபம் | ரூ. | 1000/- |

முன்பதிவுக்கு உதவி செயலாட்சித் தலைவர், (ஆர்). தி. தி. தேவஸ்தானம், திருமலை எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

ராம் பகீச்சா விருந்தினர் விடுதி
சேஷாத்ரிநகர் விருந்தினர் விடுதி ரூ. 50/-
(அறைத் தொகுதி ஒன்றிற்கு)

விதிகள :-

* ஒரு நாள் என்பது இடவசதி வழங்கப்படும் நேரத்திலிருந்து 24 மணி நேரங்கள்.
* தேவைப்படும் இடவசதி வழங்கப்பட முடியாவிட்டால் வேறு தங்கு வசதி செய்து தரப்படும். இதனால் செலுத்தப்பட்ட தொகை அதிகமாக இருப்பின் வித்தியாசப்படும் தொகை திருப்பித் தரப்படும்.
* கூட்டம் அதிகமாக இருக்கும் நிலைகளில், தங்கு வசதி ஒருநாளைக்கு மட்டுமே வழங்கப்படும்.
* ஒதுக்கப்பட்ட கால நேரத்திற்கு மேலாக தங்கு வசதிகளை பயன்படுத்தினால், நிர்ணயிக்கப் பட்ட தொகையினைப் போல் மூன்று மடங்கு தொகை அபராதமாக வசூலிக்கப்படும்.
* மேலே குறிப்பிட்டுள்ள கட்டணங்களும், கால நேரங்களும் மாற்றக்கூடியன.

# திருப்பதியில் தங்கு வசதிகள்

## இலவச தங்கு வசதிகள் :

திருப்பதி இரயில் நிலையத்திற்கு வடக்குப் புறத்தில் உள்ள ஸ்ரீகோவிந்தராஜ தர்மசாலை மற்றும் ஸ்ரீ கோதண்டராம தர்மசாலைகளில் மேஜை, நாற்காலி வசதி இல்லாத ஆனால் சமையல் செய்து கொள்ளும் வசதிகளுடன கூடிய இட வசதிகள் உள்ளன. யாத்திரீகர்கள் இவ் இடவசதிகளுக்காக தர்மசாலையில் உள்ள மத்திய வரவேற்பு அலுவலகத்தின் கண்காணிப்பாளரை அணுகவும். தொலைபேசி எண். 20991

## மேஜை, நாற்காலிகளுடன கூடிய இடவசதிகள் :

ஸ்ரீ வேங்கடேஸவரா தர்மசாலை (இரயில் நிலையத்திற்கு எதிரில்)

சிறியது ரூ. 20/- பெரியது ரூ. 30/- நான்கு படுக்கைகளைக் கொண்டது ரூ. 40/-
கண்காணிப்பாளரை அணுகவும். தொலைபேசி எண். 20103.

இரயில் நிலையத்திற்கு வடக்குப்புறம் உள்ள ஸ்ரீ வேங்கடேஸவரா விருந்தினர் விடுதி :

அறைத்தொகுதி ஒன்று ரூ. 30/-

'உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு) திருப்பதி' எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும். தொலைபேசி எண். 20166.

ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி (குளிர்சாதன வசதியுடன் கூடியது) (சித்தூர் சாலையில் உள்ளது)

பெரிய அறைத் தொகுதி ரூ. 65/- : சிறிய அறைத தொகுதி ரூ. 40/-

திருப்பதியிலுள்ள உதவி செயலாட்சித் தலைவரை (வரவேற்பு) அணுகவும். தொலைபேசி எண. 20103.

# பொய்யும் - மெய்யும்

திரு. வி. இராகவன்,
பள்ளத்தூர்.



ஆழ்வார்கள் இராமாவதாரத்தைக் காட்டிலும் கிருஷ்ணாவதாரத்தில் மண்டிக்கிடப்பார்கள். ஆசார்யர்களோ அவர்கள் நாவினின்றும் மலர்ந்த அமுதப்பாசுரங்களில் மோகித்துக்கிடப்பார்கள். இவர்கள் நாவினின்றும் வாழ்விக்கவல்ல இன்பமிகு சூக்திகள் உதிர்ந்தன. அவற்றிலே ஒன்று "இராமாவதாரத்தில் மெய்யும் கிருஷ்ணவதாரத்திலே பொய்யுமிறே தாரகம்" என்பது. இதையொட்டியே "இராமன் செய்ததைச் செய். கிருஷ்ணன் சொன்னதைச் செய்" என்னும் ஒரு வழக்கும் நாட்டிலே இன்றும் நடையாடுகிறது. இராமன் மெய்வருந்தக் காரியம் புரிந்தான். இவை பின்னோர்களும் பின்பற்றி உய்யுமாறு செயல் விளக்கமாய் அமைந்தன. சொல்லிக்காட்டவல்ல பலர்இருந்ததால் இவன்மெய்வருந்தக் காரியம் புரிய வேண்டியதாயிற்று. கிருஷ்ணனோ செய்து காட்டியது ஒன்றிரண்டைத்தவிர இவன் சொல்லிக் காட்டியதே அதிகம். சொல்ல வல்ல பெரியோர் பலரும் சொல்லக் கூசி வாளாவிருந்தமையால் சொல்லிக் காட்ட வேண்டியது அவசியமாயிற்று. ஆகவே இராமன் செய்து காட்டினான். கிருஷ்ணன் சொல்லிக் காட்டினான். இதுவே "மெய்யும் பொய்யும்" ஆயிற்று.

"அமலனாதிபிரான் அடியார்க்கு என்னையாட்படுத்த விமலன்" (அமலனாதிபிரான்1) எனத் திருப்பாணாழ்வார் ஈடும்படும்படியான அமலனாதிபிரானாகியவன் வைகுந்தத்திலே தன் பெருமையெல்லாம் பொலிந்திட அனந்தனாகிய அழகிய சிம்மாதனத்திலே தன் பிரிய நாயகிமார்களும் உடன் அமர்ந்திருக்க எல்லா அணிகலன்களும் அழகு பெறுமாறு தான் அணிந்துகொண்டு திவ்யாயுதங்களையும் ஏந்தியவனாய்க் காக்ஷி தருகின்றான். இச் சேர்த்தியழகைக் கண்டு களித்து கண்ணெச்சில் படாதவாறு பல்லாண்டு பாடிக் காப்பிடுகின்றனர் "நித்திய சூரிகள்" எனப்படும் வானோர்கள். இவ்வாறு தன் மேன்மையனைத்தும் பொலிந்திடத்தானே சில நிபந்தங்களை ஏற்படுத்திக் கொண்டான். அனந்தனாகிய சிம்மாதனத்திலேதான் அமர வேண்டும், விஷ்வக்சேனர் எனப்படும் சேனை

முதலியாரின் பிரம்பின் கீழ்தான் தன் செயல்கள் நடைபெற வேண்டும். நிழலுக்கு ஒதுங்க வேண்டுமானாலும் கருடாழ்வானின் சிறகின்கீழ்தான் ஒதுங்க வேண்டும் என்று பல கட்டுப்பாடுகள் தன்னாலே ஏற்படுத்திக் கொள்ளப்பட்டவையாகையால் இவைகளைத் தன்னாலும் மீறவொண்ணாதே! ஆகவேதான், கட்டுண்டகாளைபோல் இருக்குமிவ்விருப்பை விடுத்து தன்னிச்சைபோல் காரியம் புரிய ஆவல் கொண்டான்போலும்!

"நால்திசை நடுங்க அஞ்சிறைப்பறவை
யேறி நால்வாய் மும்மதத்து இருசெவி
ஒரு தனி வேழத்து அரந்தையை
ஒரு நாள் இரு நீர் மடுவுள்
தீர்த்தனை"
(திருவெழுக்கூற்றிருக்கை)

முன்சன்மத்தில் இந்த்ரத்யுமனன் என்னுமரசன் செய்த திருவாராதனத்தின் பெருமை, சாபத்தால் யானையாகத் தோன்றினாலும், நல்ல மணமுள்ள மலரைக் காணில் அதனைக் கொய்து எம்பெருமான் திருவடிகளில் சேர்ப்பிக்க முயலும் அவன் மனம். ஆழமிகு மடுவிலே நல்லதோர் தாமரை மலரைக் கண்டு அதனைக் கொய்தான். அங்கோர் முதலை அவன் காலைக் கவ்வி மடுவில் இழுக்க இவனோ கரையை நோக்கியிழுக்க, இப்போராட்டம் வெகு காலம் நீடித்தது. தான் கொய்த மலரை செவ்விகுன்றுவதற்கு முன் அவன் திருவடிகளிலே சேர்ப்பிக்க முடியாதோ வென்னும் நோவு அவனை வாட்டிற்று. தன்னாசையை நிறைவேற்றிவைக்க வல்லவன் 'அவன் ஒருவனே' என்னும் முழு நம்பிக்கையோடு "நாராயணா ஓ! மணி வண்ணா! நாகணையாய்! வாராய் என்னாரிடரை நீக்காய்" (சிறிய திருமடல்) எனப் பெருமுழக்கமிட்டான். இவனிட்ட பிளிறல் வைகுந்தத்திலே கொலுவீற்றிருக்கும் அவன் செவியில் விழுந்தது. உடனமர்ந்திருக்கும் தன் பிரிய நாயகிகளிடமும் சொல்லிக் கொள்ளாது சடக்கெனப் புறப்பட்டான். கைலாகு கொடுக்கவந்த சேனை முதலியாரையும் லக்ஷியம் செய்தானில்லை. கருத்தறிந்து செல்ல வேண்டிய இடத்திற்குக் கொண்டு செல்லவல்ல கருடன் மீது அமர்ந்து பறந்து வந்தான். கருத்துச் சுருண்டு அழகிய கட்டுக் கொண்டையும், இடையை அலங்கரிக்கும் பீதாம்பரமும் காற்றிலே பறந்தாட மடுக்கரை நோக்கிப் பறந்துவந்தான். படைத்திட்ட உலகையழிக்கும் காலத்திலும தனனையண்டாத பெரும் சீற்றம் இன்று உலகனைத்தும் நடுங்கும்படி அவனிடம் குடிகொண்டது. தன்னடியானின் துயர் களைய வேண்டியன்றோ இவ்வாறு பறந்துவர வேண்டியதாயிற்று, ஆக வைகுந்தத்திலிருந்து தன்னிச்சையாய்க் காரியம் புரிய விழைந்தது இவ்விதமாயிற்று.

அஞ்ஞானமே நிறைந்துள்ள இந்த அவனியே தன்னிச்சையாய்க் காரியம் புரியத் தகுந்ததுவென கோசலநாட்டு சக்ரவர்த்தியின் செல்வக்குமரனாய்த் தோன்றினான். பரமபதத்திலே வானிளவரசாகத் திகழ்ந்தான். இங்கோ கோசல நாட்டு இளவரசாகத் திகழ்கிறான். இங்கும் அவன் மேன்மைக்குக் குறைவின்றிக் காரியங்கள் நடைபெறுகின்றன. நாட்டாருக்குத் தர்மங்களை எடுத்துச் சொல்லவல்ல வசிஷ்டர் போன்ற பெரியோர்கள் பலர் நிறைந்திருக்கின்றனர். ஆயினும், "ஒருவன் சொன்னதை மற்றவன் செய்வது" எனனும் தர்மம் நேரடியாகச் சீர்மகட்டுக் கிடக்கிறது. அதனால் தகப்பன் சொன்னதைத் தனயன் கேட்டு நடப்பது என்பதைத் தான் கைக்கொண்டான். உடன பிறந்தார்களும் அவ்வாறே ஓரோர் தர்மத்தைக்கடைப்பிடித்தனர். தன்னிச்சை கொண்டு செயல் புரியத் தோன்றியவன் 'தர்மம' என்னும் கட்டுக்குள் சிக்கினான்.

"கொங்கைவன் கூனி சொற்கொண்டு"
(பெரியாழ்வார் திரு. 2-2-8)

என்றவாறு தனக்கென்று ஏற்பட்ட கூனின் காரணமாய் மந்தரை என்பாள் "கூனி" என்றே பெயர் பெற்றாள். உடலமைப்புப்போலவே இவளது அறிவும் மிளிர்ந்தது! தான் பெற்ற பிள்ளையிடம் காட்டாத அன்பையெல்லாம் மாற்றாளின் பிள்ளையான இராமனிடம் சொரிபவள் ஆயிற்றே கைகேயி! அவ்வாறான கைகேயியும் இவள் சொல்லிலே மதிமயங்கினாள். தயரதனிடம் தான் பெற்ற வரத்தினைக் கருவியாகக்கொண்டு "குலக்குமரா காடுறையப்போ" வெனக் காட்டிற்கும் அனுப்பினாள். "பிதுர் வாக்யப்பரிபாலனம்" என்னும் தர்மத்தைக் கைக்கொண்டவ விவனும் மிக்க உகப்போடு சடுதியில் சென்றான் கானகம் நோக்கி.

தன் வல்லமையெல்லாம் கிடக்க விபீடணன் சொற்கேட்டு கடலரசனைக் குறித்து மூன்று தினங்கள் உபவாசம் கிடந்தான். கல் நெஞ்சனான கடலரசனும் முன்தோன்றாதது கண்டு மிக்க சினம்கொண்டவனாய்க் கையிலே வில் ஏந்தி அம்பு தொடுத்து நின்றான். பீதியுற்ற வருணனும் இராமனுக்குப் புகழாரம் சூட்டி மிக்க பயயனாய் முன் வந்து நிற்க, "உன்னைக்குறித்தே அம்பு தொடுத்து நிற்கிறேன்" என்று சொல்ல வெட்கி, "உன் விரோதியைக் காட்டு இவ் வம்பை அவன் மீது செலுத்த" என்றான். வருணன் புகழ்ந்து சொல்லிய நாலிரு வார்த்தைகள் இராமனைப் படுத்தும் பாட்டினைக் காணீர். 'ஸ்தவ்ய: ஸ்தவப்ரிய: (விஷ்ணு ஸஹஸ்ரநாமம்) 'துதிசெய்யத் தகுந்தவன்; துதியை அனபுடன் ஏற்றுக் கொள்பவன்" எனப்படுபவன் அன்றோ இன்று இராமனாய் அவதரித்திருக்கிறான்.

தெய்வத்தன்மை சற்றும் கலவாத மானிடப்பிறவி யெடுததும், மனம் மெய் மொழி இவைகளால் ஒருபடிப் பட்டவனாகத் திகழ்ந்தும் தன்னிச்சையாய்க் காரியம் செய்ய முடியாதவனான்.

"மாலாய்ப் பிறந்த நம்பியை மாலே
செய்யும் மணாளனை
ஏலாப் பொய்களுரைப்பானை"
(நாச். திருமொழி 134)

அன்பே வடிவெடுத்தவனாய், தன் பெருங்காதலைக்காட்டித் தன்னிடம் காதல் கொள்ளும்படி செய்யும் மண வாளப் பிள்ளையாய், மெய்போலே ஆயிரம் பொய்களைச் சொல்லக் கண்ணனாய்த் தோன்றினான்.

"ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில்
ஒருத்தி மகனாய் ஒளித்து வளர"
(திருப்பாவை 25)

எனத்தான் க்ஷத்திரியனாகப்பிறந்தது தெரியாதவாறு பிறந்த இரவோடிர வாய் யாதவக் குலத்திலே ஒளித்து வளர்க்கப்படுகிறான். இங்கு தானே அதட்டுவார் யாருமின்றி தன்னிச்சை யாய்த் திரிந்து தீம்புகள் செய்யலாம்!

அன்று இராமனழகிலே மோஹித் துக் கிடந்த முற்றும் துறந்த முனிவர் களன்றோ இன்று கோபியர்களாய்த் திகழுகின்றனர். இவர்களோடு கூடிக் குலவும் இவன் திருமேனியில் ஒட்டு மஞ்சளும் குங்குமமும் அப்பிக் கிடக் கும். "இவற்றை எவளிடமிருந்து பெற்றீர்?" எனக் கேட்பவளுக்கு "உன்னைத் தவிர வேறு ஒருவனை நான் அறிவனோ? உன்னிடமிருந்து தானே இவற்றைப் பெற்றேன்" என் பான். என்னே பச்சைப் பசும்பொய்! இங்கு அஸத்யம் வீறுபெறும்படியல் லவோ அவதரித்திருக்கிறான்.

பீஷ்மர், துரோணர் போன்ற அறி வாளிகளும், ஏன் பாண்டவர்களும் மற்றும் பலரும் நிறைந்துள்ள ராஜ சபையிலே துரியோதனன் தம்பி துச் சாதனன் திரௌபதியின் துகிலுரி யும்காலை அவளைக் காத்திட யாரும் முன் வரவில்லையே. கண் ணன் ஒருவனே தன்னைக் காத்திட வல்லவன் என்னும் பூரண விசுவாசத் தோடு "கோவிந்தா" வெனவழைத் தாள். துவாரகையினின்றும் அவன் துகிலை வளர்ப்பித்துக் கொடுத்தா னாகிலும் தன் பேரைச் சொல்லிக் கூப்பிட்டவளுக்குத் தான் முன் னின்று உதவாதது கண்ணனுக்குப் பெருங்குறையாயிற்று. "திரௌபதி வெகு தூரத்தில் இருக்கின்ற என்னை கோவிந்தாவெனக் கூவி யழைத்தாள். அது வட்டிக்கு வட்டி ஏறின கடனைப்போல் என் மனத்தி னின்றும் அகலவில்லை". மேலும், "நம்முடைய பெயர் ஒன்றே இத் தனை காரியம் செய்ததேயொழிய நாம் இவளுக்கு யாதொன்றும் செய் திலோம்" என்று தன்னைத்தானே நொந்துகொள்ளுபடியாயிற்று. இது வும் உண்மையில் பொய்தானே!

"கோதில் செங்கோல் குடை மன்னரி
டை நடந்த தூதா! தூமொழியாய்!
(பெரிய திருமொழி 6-2-9)

இராமாவதாரத்திலே தூது போகாத குறைதீரப் பாண்டவர்க் காய்த் தூது போனான். சர்வசக்த னானஇவன் துரியோதனின் கொடிய மனத்தினை நன்கு அறிந்தவனேயாகி லும் பாண்டவர்களையும் இவனையும் ஒன்று சேர்க்கவே விரும்பினான். துரியோதனனோ "பாண்டவர்களுக் குத் தருமமும் அதன் பலனான சுவர்க்கலோகமும் உண்டு. அவர் களோ ஐவர். நாங்களோ நூறுபேர் கள். இப்பரந்த பூமியடங்கலும் எங்களுக்கே போதுமானது. ஊசி குத்தும் இடமும் அவர்களுக்குக் கொடுப்பதற்கில்லை" என்று வெட் டொன்று துண்டிரண்டாக வார்த்தை சொன்னான். "இது உங்கள் எண்ண மாயின் யுத்தத்தைத் தவிர்க்கவிய லாது" எனச் சொல்லி வெளியேறி னான் கண்ணனும்.

இங்கோர் அருமையான ஐதிகம் கேளீர். ஆசார்யரான பட்டர் இரா மாயணத்திலே மிக்க ஈடுபாடையவர். இவரின் ரசோக்தியை அனுபவிக்க விரும்பி சிறியாத்தான் என்பவர் "சக்கரவர்த்தித் திருமகனுக்கு எல் லாவித ஏற்றமும் இருந்ததேயாகி லும் ஆச்ரிதர்களுக்காக கழுத்திலே ஓலை கட்டிக்கொண்டு தூதுபோன ஏற்றமில்லையே? கண்ணபிரானுக் கன்றோ இவ்வேற்றமுண்டு" என் றாராம். இது கேட்டு பட்டர், "ஓய்! குணக்கடலாகிய இராமபிரானுக்குத் தூதுபோதல் அநிஷ்டமன்று காணும். இக்ஷ்வாகு வம்சத்தில் சார்வபௌம னாகப் பிறந்தானாகையால் மகா ராஜன் கழுத்தில் ஓலை கட்டித் தூது போக விடுவாரைக் காணாமையால் இராமன் தூதுபோகப் பெற்றிலத் தனை. அந்த அவதாரத்தில் சிறிய திருவடி 'அநுமன்' அங்குமிங்கு மாய்ப் போவதும்வருவதுமாய் தூது கிருத்யம் செய்து, வார்த்தை சொல் லித்திரிந்த ஏற்றத்தைக்கண்டுநாமும் இப்படி ஆச்ரிதர்களுக்காகத் தூது போகப்பெற்றிலோமே எனத் திரு வுள்ளம் குறைபட்டு அக்குறை தீரு கைக்காகவே பின்னை யாதவ குலத் திலே வந்து பிறந்து தூதுசென்றான். க்ஷத்திரியன் என்று நிச்சயிக்கையில் தூதுபோக விடமாட்டார்களே யென்று அத்தை மறைத்து வளர்ந் தான் காணும். அபிஷிக்த க்ஷத்திரிய னாகப் பிறந்தால் 'தூதுபோ' என்று ஏவ ஒருவருக்கும் நாவெழாதிறே" என்றருளிச் செய்தாராம்.

"பார் மன்னர் மங்கப் படை தொட்டு
வெஞ்சமத்து
தேர் மன்னர்க்காய் அன்று தேரூர்ந்
தான்"
(பெரிய திருமொழி 11-5-8)

என்றவாறு போர் ஒன்றே நீதிக்கு வழி என்னும் நிலையில் இருதிறத்தாரும் கண்ணன் ஒத்தாசை வேண்டி வந்து நின்றனர். "வலிமை மிக்கத் தன் பெருஞ்சேனையை ஒருவன் கொள் வது, யுத்தத்தில் ஆயுதம் எடுக்காத தன்னை ஒருவன் கொள்வது" என் னும் தன் முடிவுக்கேற்ப பெருஞ் சேனையைத் துரியோதனனும் தன் னந்தனியனான கண்ணனை அர்ச்சுன னும் கொண்டனர். துரியோதனின் அறியாமைக்கிரங்கிய பீஷ்மர் போன்றோர் தூண்டுதலால், யுத்தத் தில் ஆயுதம் எடேன் என்னும் உறுதி மொழியைக் கண்ணனிடம் பெறாுச் சென்றான். இவ்வுறுதிமொழிக் கேற்ப கண்ணனும் தன்னை அர்ச்சுன னுக்குத் தேராட்டியாக ஆக்கிக் கொண்டான். "கண்ணன் தேர்ப் பாகனாய் இருப்பதினால் என் வல் லமை சிறிதும் பயன்படவில்லை.

அவன் தேரை நடத்தும் விதம் விசித்திரமாகவன்றோ விருக்கிறது" என்று வல்லமைமிக்க பீஷ்மரும் தன் இயலாமையை வெளிப்படுத்தும்வண்ணம் கண்ணன் தேரோட்டிய சாமர்த்தியம் விளங்கிற்று.

அதர்மமே தலைமைதாங்கி யுத்தத்தை நடத்தி முடித்தது போன்று பதின்மூன்றாம் நாள் போர் நடந்து முடிந்தது. அன்று யாராலும் உடைத்து உட்புக முடியாதவாறு ஓர் வ்யூகத்தைத் துரோணர் வகுக்கிறார். அர்ச்சுனனின செல்வக்குமரன் அபிமன்யு அவ்வியூகத்தையும் உடைத்து உட்புகுந்த பெருமையும் பெற்றான். தேனீக் கூட்டம் போன்று ஒன்று சேர்ந்து தாக்கிய பீஷ்மர், துரோணர், கர்ணன் போன்ற சிறந்த போர் வீரர்களுடன் போரிட்டுக் களைத்து ஆயுதமின்றித் தன்னந்தனியனாய் நிற்கும் அவனை ஜயந்த்ரதன் என்பான் கோழைபோன்று வெட்டிக் கொன்றான். இதறிந்து அர்ச்சுனனும் ஜயந்த்ரதனை நாளை சூரியன் அஸ்தமிப்பதற்குள் கொல்வேன். இல்லையாகில் தீக்குளித்து மாள்வேன்' என்றுசூளுரைக்கின்றான். துரியோதனாதியர்களோ ஜயந்த்ரதனை ஒரு நிலவறைக்குள் வைத்துப் பாதுகாக்கின்றனர். சூரியன் மலைவாயில் விழ ஒரு சில நாழிகை இருக்க, பகலும் முடிந்தது, இரவும் வந்தது என்று தோன்றுமாறு செய்ய கண்ணன் திருவுள்ளம கொண்டான்.

"பகல் கரநத சுடராழிப் படையான" (பெரிய திருமொழி 6-9-5) என்று கண்ணனின் திருக்கரத்தினின்று விடுபட்ட சுதர்சனாழ்வான் சூரியனை மறைத்து உலகெல்லாம் இருள் சூழும்படி செய்தான். இங்கோர் அருமையான வியாக்யான சூக்தியோவெனில், "நிரவதிக தேஜஸ்ஸாலே தேஜப் பதார்த்தத்தை மறைத்தானாயிற்று. ஆதித்தனுடைய தேஜஸ்ஸைக் கண்ணாலே முகக்கலாம், ' திருவாழியாழ்வானு

டைய தேஜஸ்ஸு கண் கொண்டு முகக்க வொண்ணாதபடி இருக்கை யாலே இருண்டு காட்டிறறாயிற்று'' என்பதே மனிதப் படைப்பான பேருந்துகளில் பொருத்தப்பெற் றுள்ள மின் விளககுகள உமிழும் ஒளிக்கதிர்கள் எதிரேயுள்ள பொருட் களைத் தெரியாதவாறு நம் கண்களை இருளடிக்கச் செய்கிறது. ஓர் சிறிய மின் விளக்கே இதனைச் செய்ய முடியு மாயின், "சுதர்ஸனம் பாஸகர கோடி துல்யம்'' எனறு கோடி சூரியன் களுக்கு ஒப்பான ஒளியை உடைய சக்கரத்தாழ்வான் உலகோருடைய கண்களையெல்லாம் இருளடையச் செய்ததில வியப்பேதுமில்லையே!

அஸ்தமனமாகிவிட்டது. அர்ச்சு னனும் தன் சபதமான தீக்குளிப்பதில் முனைந்தான் இதனைக் கண்டு களிக்க துரியோதனனும் ஜயந்த்ரத னுடன் தோன்றினான். "அர்ச்சுனா! உன் வில்லையும் அம்பறாத்தூணியை யும் எடுத்துக்கொள்'' என்று சொல்லி "இதோ பார்!'' என்று ஜயந்த்ர தனைச் சுட்டிக் காட்டித் தன் சுதர் சனப் படையையும் உடன் திரும்ப வாங்கிக் கொண்டான். பகலவன் ஒளி எங்கும் பரவிப் பகலாயிற்று. அர்ச்சுனனும் ஓர் அம்பாலே ஜயந்த்ர தன் தலையை வாங்கினான். 'ஆயு தம் எடேன்'' என்றவன் ஆயுதம் ஏந்திப் பொய்யனானான். தன்னடி யார் திறத்தே காரியங்களைத் தலைக் கட்டிக் கொடுப்பதில் தான பொய் யனேயாகிடினும் உகப்பே கொள் கிறான்.

நாலரு திருத்தோள்களோடும திவ் யாயுதங்களோடும் தனக்குக் குழந் தையாய்த் தோன்றிய கண்ணனைத் தேவகி பிரேமகனத்தால் சம்சனால் கண்ணனுக்கு என்ன தீங்கு வருமோ வென அஞ்சி, "இவைகளை யெல் லாம் மறைத்துக்கொண்டு சாதாரணக் குழந்தையாகத தோன்றுவாயாக'' என்று கேட்டுக்கொள்ள அதன்படியே இவனும் மாறினான். இவன் தீம்பு பொறுக்காத யசோதையும் இவனை ஓர் உரலுடன பிணைத்துக் கட்ட, உரலையும் இழுத்துக்கொண்டு தெருவே வநதான். ஒன்றை ஒன்று தழுவிககொள்ளுமாபோலே சிறிய இடைவெளியோடு ஓங்கியுயர்ந்து வளர்ந்திருநத இரட்டை மருதத்தின் இடையே புகுந்து வெளியே வநதான். அணுவிற்கும் அணுவான இவனுக்கு இதுஓர் பெரியகாரியமில்லை. ஆயினும் இவன் இழுத்து வந்த உரல் மரஙக ளுக்கு இடையே மாட்டிக்கொண்டது. இவன் பலம் கொண்டு இழுக்க அம் மரங்கள் சடசடவென பேரிரைசச லோடு முறிந்து விழுந்தன மிக்க அச்சத்துடன் குழுமினர் கோகுலத் தார் அவ்விடத்தில். இவனோ ஒன்று மறியாதவன் போன்று சிரித்துக் கொண்டிருந்தான்

கண்ணனைக் காத்திடும் பரிவு கொண்ட சங்கும் சக்கரமும், "ஐயரே! ஓர் ஆபத்தல்லவோ நிகழவிருந்தது. நாம் ஒதுங்கியிருந்ததாலல்லவோ இவ்விதமாயிற்று. இனி ஒருக்காலும் அவன் திருக்கரம்விட்டு அகலுவ தில்லை'' என்று தீர்மானித்துக் கொண்டதாம். மனக்கண்ணே கண்ட இதனை சூடிக்கொடுத்த சுடர்க் கொடி ஆண்டாளும் வெகு அழகாக, "நின்ற புனர் மருதம் சாய்தீர்த் தான் கைத்தலத்தே ஏறிக்கொண்டு'' (நாச். திருமொழி 7-6) என்று பின் னோரும் அனுபவிக்குமாறு அருளிச் செய்திருக்கிறாள். "எப்போதும் கை கழலா நேமியான்'' (பெரி. திரு வந்தாதி 89) என்று ஆழ்வாரும் என் றும் கையை விட்டு அகலா சக்கரத் தையும் சங்கையும் கண்டனுபவித் தல்லவா இவ்வாறு அருளிச் செய் திருக்கிறார்கள். மேலும், "சார்ங்க முதைத்த சரமழைபோல்'' என்ற வாறு இராமன் கையிலேந்திய சார்ங்க மென்னும் வில்லினின்றும் அவனது முயற்சியின்றிப் புறப்பட்டுச் சரமழை யாய்க் கொட்டியதுபோன்று, "கைந் நின்ற சக்கரத்தான் கருதுமிடம் பொருது செய்'' (திருவாய் 10-6-8) என்று கண்ணன் கருத்திற்கிசைய காரியம் புரிபவனான சக்கரத்தாழ் வான் தானே புறப்பட்டுச் சென்று சூரியனை மறைத்தான்.

"மெய்யனா நம் விரும்பித் தொழு
வார்க்கெலாம்
பொய்யனாகும் புறமே தொழுவார்க்
கெலாம்''
(திருவாய் 9-10-7)

என எப்பலனையும் எதிர்பாராது அவனே உபாயம் என்று அவன் திரு வடி பற்றுவோர் மெய்யடியாவர். அவர்களுக்கே தனனுடைய ரூபம் குணம் செல்வம் ஆகியவற்றைக் காட் டிக் கொடுப்பான். பலனை எதிர் பார்த்து அவனைப் பற்றுவோர் பொய்யன்புடையரே. கண்ணன் படைபலத்தைக் கருத்திற் கொண்டே துரியோதனன் கண்ணனை அணு கினான். அவனும் தன்னை மறைத்து இவன் விரும்பியதை வழங்கினான். அவனையன்றி வேறொன்றையும் விரும்பாதவனான அர்ச்சுனனுக்குத் தனனையே கொடுத்தான். இவ் வாறு பொய்யனாகிறான் பொய்யன் புடையார்க்கு; மெய்யனாகிறான் மெய்யன்புடையார்க்கு.

ஆகப் பலனைக் கருத்திற்கொண்டு அவனது அடிதொழும் மானிடர்க்கு அவன் சொல்லும் பொய்கள் தாமே உய்விக்கவல்லதாகும.



## 31-10-90ஆம் தேதியுடன் முடிவடையும் சந்தா எண்கள்

18, 52, 54, 58, 109, 112, 190, 228, 234, 237, 239, 304, 313, 345 A, 365, 367, 380 to 382, 403, 405 to 407, 409, 412 to 414, 416, 418 A, 421, 428, 541, 548, 549, 553, 556, 564, 569, 570, 583, 584, 646, 652, 669, 709, 712, 725, 740, 785, 790, 792 to 795 798, 800, 804, 812, 814, 815, 823, 825, 830 to 833, 1304, 1478, 1526, 1544, 1598, 1779, 1824, 1832, 1875, 1879, 1906, 1930, 1934, 1941, 1943, 1972, 1973, 1977, 1992, 1994, 2003, 2004, 2035, 2038, 2043, 2053, 2061, 2076, 2715, 2863, 3036, 3059, 3061, 3099, 3104, 3140, 3262, 3289, 3296, 3308, 3313, 3335, 3340, 3347, 3356, 3361, 3366, 3367, 3373, 3376, 3381, 3394, 3403, 3406, 3407, 3409, 3431, 3435, 3436, 3440, 3448, 3453, 3454 to 3458, 3460, 3462, 3463, 3464, 3466, 3472, 3473, 3477, 3479, 3482, 3483, 3488, 3499 to 3501, 3504, 3506, 3509, 3510, 3515, 3516, 3520, 3525, 3526, 3528, 3529, 3531, 3534, 3540, 3548, 3554, 3561, 3563, 3565 to 3567, 3572 to 3574, 3579, 3581 4402, 4452, 4456, 4484, 4487, 4488, 4490, 4493, 4500, 4502, 4512, 4514, 4517, 4523 to 4526, 4528, 4536, 4538 to 4541, 4547, 4548, 4555, 4557 to 4560, 4562, 4564, 4565, 4567, 4568, 4577, 4578, 4580 to 4582, 4585, 4589 to 4595, 4599, 4602, 4607, 4613, 4619, 4622, 4626, 4627, 4631, 4635, 4637, 4639, 4646, 4648, 4649, 4654, 4657, 4659, 4660, 4665, 4671 to 4678, 4680, 4691, 4694 to 4696, 4698, 4702, 4704, 4718, 4720, 4721, 4723, 4724, 4728, 4737, 4739, 4742, 4748, 4753 to 4758, 4764, 4765, 4769, 4771, 4777, 4779, 4780 to 4785, 5271, 5983, 6071 to 6099, 6101 to 6106, 6108 to 6111, 6113 to 6116, 6118, 6120 to 6144, 6146 to 6159, 6176 to 6181, 6183 to 6187, 6191 to 6197, 6200, 6203 to 6243, 6245 to 6248, 6251 to 6258, 6265 to 6267, 6270 to 6299, 6301 to 6304, 6306 to 6310, 6312 to 6342, 6344, 6347 to 6387, 6389 to 6399, 6401 to 6419, 6421 to 6429, 6431 to 6435, 6622.

* * *

(4-ம பக்கத் தொடர்ச்சி)

தி. தி. தேவஸ்தானத்தின் செயற் பொறியாளரான திரு. பி. ஆஞ்சநேயலு நாயுடு அவர்கள் 13-7-90 முதற்கொண்டு கண்காணிப்புப் பொறியாளராகப் பதவிஉயர்வு பெற்றுள்ளார்.

ஆந்திர மாநில உயர்நீதி மன்றத்தின் தலைமை நீதிபதி, திரு. யோகேஸ்தர தயாள் அவர்கள் 21-7-90 அன்று திருமலைக் கோயிலுக்கும், திருச்சானூர் கோயிலுக்கும் வருகை புரிந்தார்.

## ஸ்ரீ தியாகராஜர் வருடாந்திர இசை விழா

திருப்பதி ஸ்ரீ தியாகராஜா இசை விழா அறக்குழு ஆதரவில் திருப்பதி ஸ்ரீ தியாகராஜர் மண்டபத்தில் 45-ஆவது ஸ்ரீ தியாகரர்கர் இசைவிழா 20—7—90 முதல் 28—7—90 வரை வெகுவிமர்சையாகக் கொண்டாடப்பட்டது. இவ்விழாவிற்குத் தஞ்சாவூரைச் சார்ந்த தென்னிந்திய கலாசார நிறுவனத்தின் இயக்குநர் திருமதி. ஷீலா பிரியா, ஐ.ஏ.எஸ்., அவர்கள் சிறப்பு விருந்தினராகவும், விழாத்தலைவராக தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. எம்.வி.எஸ். பிரஸாத் ஐ.ஏ.எஸ். அவர்களும் பங்கேற்க, துவக்க விழா நிகழ்ச்சிகளை திருமதி. ரேணுகா பிரஸாத் அவர்கள் மங்கள தீபம் ஏற்றி துவக்கி வைத்தார். ஒன்பது நாட்கள் நடைபெற்ற இவ்இசைவிழா நிகழ்ச்சியில் வீணைக்கலைஞர் திரு. பி.சிட்டிபாபு அவர்களின் வீணை இசை நிகழ்ச்சி உள்ளிட்டு, திருமதி. கோ. கா. சரஸ்வதி, திருமதி. கீதாராஜசேகர், திருமதி. அருந்ததி சர்க்கார், திருமதி. சுதா கிருஷ்ணன், திரு. நாகாராஜ பிரஸாத் காஸ்கர், மற்றும் பல கலைஞர்களின் இன்னிசைக் கச்சேரி நிகழ்ச்சிகள் நடைபெற்றன. 25—7—90 அன்று வீணை வித்துவான் திரு. பி. சிட்டிபாபு அவர்களுக்கு, அறக்குழு சார்பில் பிரபல சென்னை தொழிலதிபர் மற்றும் தெலுங்கு அகாடமி தலைவர் திரு. பி. ஒபுல் ரெட்டி அவர்களால் "ஸப்தகிரி சங்கீத வித்வன் மணி" எனும் பட்டம் அளிக்கப்பட்டுக் கௌரவிக்கப்பட்டார்.

உடுப்பி ஸ்ரீ மத்வாச்சார்யா மூல மடம் புதிகே மடத்தின் தலைவர் அருள்மிகு ஸ்ரீ சுகுனேந்திர தீர்த்த சுவாமிஜி அவர்கள் தற்போது இந்தியா முழுதும் புனிதயாத்திரை மேற்கொண்டுள்ளார். இப்போது சுவாமிஜி அவர்கள் 12-9-90 வரை தில்லியில் சாதுர்மாஸ்ய அனுஷ்டானத்தில் முகாம் இடுவார். அதன்பிறகு ஹரித்லார், பதரி, நைமிசாரண்யம், அயோத்யா, பிரயாகை, காசி, கயா, காட்மாண்டு (நேபால்) கல்கத்தா, பூரி, புவனேஸ்வர் வழியாக 1991-ம் ஆண்டு ஜனவரி மாதத்தின்போது உடுப்பி வந்து சேருவார். இப்புனித யாத்திரையில் பங்கேற்க விரும்பும் பக்தர்கள் விஜய் விட்டல் டிராவல்ஸ் பெல்லாரி அல்லது ஆர். வி. சலபதி, சுகுண காரியாலயம், உடுப்பி எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும். ★

(28-ஆம் பக்கத் தொடர்ச்சி)

இப்பொழுது இம்மலைகளில் சிறு புல் பூண்டுகள, அடர்ந்த காடுகள் என்ற பல்வேறுநிலைத் தாவரங்களைக் காணலாம். இங்ஙனம் இம்மலை பூதத்தாழ்வார் காலத்தில் பல்வேறு மாற்றங்கள் அடைந்து மக்கள் வசிப்ப தற்கேற்ற நிலையையும் அடைந்து விட்டது. அதனால் அவர் அம்மலையைக் குறிக்க "இளங்கிரி" என்ற சொல்லை ஆண்டுள்ளார் என்பது. இந்த ஆழ்வாரின் இன்னொரு பாடலைக் காட்டி அதில் கோயிலைப் பற்றிய குறிப்பு வருகின்றது என்றும் கூறுவர். அவர்காட்டும் பாடல்.

வெற்பென் றிருஞ் சோலை
வேங்கடமென றிவ்விரண்டும்
நிற்பெனறு நீ மதிக்கும்
நீர்மைபோல்—நிற்பென்று
உளம் கோயில் உள்ளம் வைத்
துள்ளினேன் வெள்ளத்து
இளங்கோயில் கைவிடேல்
என்று.

(இரண். திருவந்-54.)

(நிற்பு-உகந்து வாழும் இடம்; வெள்ளம்-திருப்பாற்கடல்).

இதில் 'இளங்கோயில்' என்பதற்கு முதற்கோயில் பழுது பார்க்கப்படுங் கால் அதிலுள்ள இறைவனின் திருமேனியை எழுந்தருளச் செய்வதற்குத் தற்காலிகமாக அமைக்கப்பெறும் கோயில் என்னும் சரியான பொருளையே கூறுவர். இத்தகைய தற்காலிக் கோயில திருமலையில் காணப் பெறவில்லை என்று கூறும்போது தான் தவறு நேரிடுகின்றது. இதனை ஈண்டுச் சுறு ஆய்ந்து அவர் காட்டும் சான்றுகளின பொருத்தமின்மையைத் தெளிவாகப் புலப்படுத்துவேன்.

**ஆய்வு :**

முதலில் அவர் கூறும் கருத்துக்கள் இன்னவை என்பதைத் தெளிவாக்க வேண்டும்.



திருமலையில் 'க்யூ' கட்டடத்தொகுதி

**முற்கருத்து :**

வேங்கடத்திற்கு "இளங்கிரி" என்றபெயர் பூதத்தாழ்வாரால் தரப் பெற்றது என்பது (முதற்பாடல்—இரண். திருவந்-53)

**இரண்டாவது கருத்து :**

'இளங்கோயில்' என்ற இன்னொரு கோயில் இருந்ததாகக் கருதி, அத்தகைய இரண்டாவது கோயில் திருமலையில் இல்லையே என்று கூறுவது (இரண்டாம் பாடல்-இரண். திருவந்-54)

முதற்பாசுரத்தின் பொருளை நோக்கும்போதே பூதத்தாழ்வார் மலையை 'இளங்கிரி' என்று குறிப்பிடவில்லை என்பது தெரியவரும். மேற்குறிப்பிட்ட பாசுரத்தில் மலையை ஆழ்வார் ஒரு சமத்காரம் பொலிய வருணித்திருப்பது மேல் நோக்காகப் பார்ப்பவர்களகே தெரிய வரும். திருமலை யாத்திரையாக வரும் பெரியவர்கள் பலர்

வெறியார் தண் சோலைத்
திருவேங் கடமலைமேல்
நெறியாய்க் கிடக்கும்
நிலையுடையேன் ஆவனே.

(பெரு. திரு-4-8.)

என்று குலசேகரப்பெருமாள் விரும்பினபடி, திருமலை ஏறும் வழியில் அன்பு வைத்து, திருமலைமேல் சென்று வாழ்வதைக் காட்டிலும், திருமலை வழியில் கிடப்பதையே பெரும் பேறாகக்கொண்டு அவ்வழியிலேயே வீற்றிருந்து எம்பெருமானைச் சிந்தை செய்கின்றனர். அப்போது மூச்சுவிடுதல், உடம்பு அசைத்தல் முதலிய ஒன்றுமின்றி வால்மீகி போன்ற மாமுனிவர்களைப்போல் யோக நிலையில் ஆழ்ந்துகிடக்கின்றனர். அவர்கள் கூந்தல் கற்றை முன்னின்று பின் தாழ்ந்திருப்பதைக் கண்ட பூங்கொடிகள் அவர்களை 'வீற்றிருக்கும மனிதர்கள்' என்று தெரிந்து கொள்ளாமல், இவை 'சிறு மலைகள்' என்று எண்ணி அவற்றின் மீது படர்கின்றன. இங்ஙனம் பக்தர்கள்மேலும் பூங்கொடிகள் படர்ந்திருப்பது அற்புதமான காட்சியாக அமைகின்றது. இப்படிப்பட்ட காட்சிக்கு இடமான திருமலையே நாம் விரும்பும் திருப்பதியாகும். இங்கு வழியில் விற்றிருக்கும் பெரியோர்களை 'இளங்கிரி' (சின்னமலை) எனக் கூறினாரேயன்றி மலையை அன்று என்று அறியத்தக்கது. எனவே திருமலையை 'இளங்கிரி' என்று வருணிக்கவில்லை என்பது தெளிவு.

இரண்டாவது பாசுரத்திலும் சமத்காரமாக ஒரு கருத்து வெளியிடப் பெறுகின்றது. 'தென்னன் பொருப்பும் தெய்வ வடமலையும்' எனப் போற்றப்பெறும் திருமாலிருஞ் சோலைமலைதிருவேங்கடமலைகளில் எம்பெருமான் வைத்துள்ள விருப்பத்தையே தம்முடைய திருவுள்ளத்திலும் வைத்திருக்கும் திறத்தை ஒரு சமத்காரமாக வெளியிடுகின்றார் ஆழ்வார். ஸ்ரீவசனபூஷணத்திலும் "கல்லும் கனைகடலும் (பெரி. திருவந்-68) என்றபடியே இது சித்தித்தால் அவற்றில் ஆதரம் மட்டமாயிருக்கும்" 'இளங்கோயில் கைவிடேல்' (இரண். திருவந்-54) என்று இவன் பிரார்த்திக்க வேண்டும்படியாக இருக்கும்' (சூ. ஸ்ரீவச. பூஷ. சூத்திரம்-175, 177 — புருஷோத்தம நாயுடு பதிப்பு). என்றருளிச் செய்தது இப்பாசுரத்தை உட்கொண்டேயாகும் என்பது ஈண்டு அறியத்தக்கது ஆழ்வார் எம்பெருமானைநோக்கி, "மேற்குறிப்பிட்ட இரண்டு மலைகளிலும் நீ எவ்வளவு மகிழ்ச்சியுடன் வாழ்கின்றாயோ அவ்வளவு மகிழ்ச்சியுடன் என் இதயத்திலும் வாழ்கின்றாய் என்று கண்டறிந்தஅடியேன் 'வெள்ளத்து இளங்கோயில் கைவிடேல்' என்றுபிரார்த்திககின்றேன்" என்கிறார் இப்பாசுரத்தில்.

இக்கருத்தை மேலும் தெளிவாக்குவது இன்றியமையாதது. 'வெள்ளம்' என்பது திருப்பாற்கடல். திருப்பாற்கடல் எல்லா அவதாரங்கட்கும் மூலக்கிழங்காக இருப்பது. விபவாவதாரங்களும் மற்றும் அர்ச்சாவதாரங்களும் இதன் மூலமாகவே நிகழ்வதாகக் கொள்ளும் கொள்கை வைணவர்களிடம் உள்ளது. இக்காரணம் பற்றித் திருப்பாற்கடல் 'இளங்கோயில் எனப்படும். (இளங்கோயில் - பாலாலயம்) இக்காலத்தும் திருக்கோயில்களைப் பழுதுபார்த்துப் புதுப்பிக்க நேருங்கால் அங்குள்ள எம்பெருமான் திருமேனியைப் 'பாலாலயப் பிரதிஷ்டை' செய்வது வழக்கமாக இருப்பதை நடைமுறையில் காணலம். வேறொரு பெருங்கோயிலில் சென்று சேர்வதற்கு உறுப்பாகச் சிறுகக் கொள்ளும் கோயில் பாலாலயம் ஆகின்றது.) திருமலை முதலிய திவ்விய தேசங்களும் அன்பர்களுடைய இதயமுமாகின்ற பெருங்கோயிலிற் சென்று சேர்ந்து வாழ்வதற்குப் பூர்வாங்கமாகவே, எம்பெருமான் திருப்பாற்கடலில் வாழ்வதாக ஆழ்வார்கள் அநுசந்திப்பார்களாதலால், அந்த அநுசந்தானத்திற்கு இணங்கத் திருப்பாற்கடலை 'இளங்கோயில்' என்று சொல்லுதல் பொருத்தமுடைத்தல்லவா? பெருங்கோயிலிற் சென்று சேர்ந்த பிறகு இளங்கோயிலில் அன்பு இருக்கக் காரணம் இல்லாமையால், எம் பருமானுக்கும் தமது திருவுள்ளமாகின்ற பெருங்கோயிலில் வாழ்வு அமைந்த பிறகு, இளங்கோயிலாகிய திருப்பாற்கடலில் அன்பு குறைந்துவிடும் என்றறிந்த ஆழ்வார், 'பிரானே, அவ்விளங்கோயிலில் நீ வைத்திருக்கும் அன்பினைக் குறைத்துக்கொள்ளலாகாது. என் உள்ளத்தில் வந்து சேர்வதற்கு அவ்விடம் பூர்வாங்கமாக இருந்ததனால், அதன மீது அடியேன் நன்றி பாராட்டக்கடவேன். அதன் காரணமாகப் பிரார்த்திக்கின்றேன். அவ்விடத்தை நீ ஒரு நாளும் கைவிடலாகாது' என்கின்றார். இதனால்,

> 'பனிக்கடல் பள்ளிகோளைப்
> பழகவிட்டு ஓடிவந்து என்
> மனக்கடலில் வாழவல்ல
> மாய மணாள நமபீ!"
>
> (பெரியாழ். திரு-5:4-9)

(பள்ளிகோளை — பள்ளி கொள்ளலை)

என்று பெரியாழ்வார் கூறுவதுபோல், திருப்பாற்கடலையும் புறக்கணித்துவிட்டுத் தம் இதயத்தில் வநது சேரும் படியான பேரன்பு எம்பெருமானுக்கு விளைந்தமையைத் தெரிவிப்பதே பூதத்தாழ்வார் பாசுரத்தின் உட்பொருளாகும் என்பது ஈண்டு அறியத்தக்கது. இதனால் இளங்கோயில் என்பது, திருமலையில் உள்ள இனனொரு கோயில் என்று திரு பிள்ளையவர்கள் கூறுவது சிறிதும் பொருத்தமுடைத்தன்று என்பது தெளிவாகும்.

இதுகாறும் கூறியவற்றால் சிலப்பதிகாரம், புறப்பொருள் வெண்பா மாலை, முதலாழ்வாாகள், பாரதி வரை கூறுவது இப்பொழுதுள்ள திருவேங்கடமே என்பது தெளிவாகும்.

✱

(3-ம பக்கத் தொடர்ச்சி)

திட்ட இவ்அன்னதான பெருமையினை இன்றைய தலைமுறையினர் அறிந்து தெரிந்திடும் வகையில் திருமலையில் நாளும் சுமார் பத்தாயிரம் பக்தர்கள இரு வேளையும் இலவச உணவினைப் பெற்றிடும் வகையில் கடந்த நான்கைந்து ஆண்டுகளாக நன்கொடையாளர்கள செலுத்திடும் தொகைக்கு ஈடாக தானும் தொகை அளித்து "ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய அன்னதான" திட்டம் ஒன்றினை தி. தி. தேவஸ்தானம் செயற்படுத்தி வருகின்றது.

நாளுக்கு நாள் பெருகி வரும் திருமலை பக்தர்கள் கூட்டத்தினர்க்கு, குறிபபாக எதிர்வரும் பிரம்மோத்ஸவம் போன்று பல உத்ஸவங்களுக்கு திருமலையில் கூடிடும யாத்திரிகப் பொது மக்களுக்க அன்னதானம் செய்வதை ஓர் பெரும் வேள்வியாக நாளும் தி. தி. தே. செய்துவரும் இத்தருணத்தில், இவ்அன்னதான திட்டத்தினைத் திருமலையில் மட்டுமன்றி, ஆன்மீகத் தாகத்தோடும், சமய ஈடுபாடுடனும் மக்கள் கூடிடும் திருத்தலங்களிலும் செயற்படுத்திட உள்ளூர் மக்களும், பொது நிறுவனங்களும், சமூக அமைபபுகளும் ஒன்றிணைந்து செய்றபடுவார்களேயானால், அதுவே "தனியொரு மனிதனுக்கு உணவில்லையெனில் இச்சகத்தினை அழித்திடுவோம்" எனறு பட்டனி கண்டு பதைத்திட்ட பாரதி போன்ற ஆன்றோர்க்கு நாம் செலுத்திடும் நினைவஞ்சலிகளாக அமையும்.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

